உ

சிவமயம்

# பகுத்தறிவுச் சமய சிந்தனைகள்





ACC.No. 26111

341 79/2

C. RAMANATHAN B.COM
சொ. ராமநாதன் சித்தாந்த வித்தகர்
7912

உ
சிவமயம்

# பகுத்தறிவுச் சமய சிந்தனைகள்



ஆசிரியர்:

'சித்தாந்த வித்தியா சாகரம்'

'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்'

**திரு. கு. வைத்தியநாதன்**

இயக்குநர்.






சைவசித்தாந்தப் பயிற்சி நிலையம்

திருவிடைமருதூர் - 612 104.

79/2

## சமர்ப்பணம்



எளியேனின் ஞானத்தந்தை
திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குரு மகாசந்நிதானம்
**சீர் வளர் சீர்**
**சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**
பொற்பாத கமலங்களில்
இந்நூலைச் சமர்ப்பணம் செய்கிறேன்.

உ

சிவமயம்

# முன்னுரை

''சமயம்'' என்னும் சொல், சமையம் என்னும் சொல்லின் திரிபு ஆகும். சமைதல் என்பது பக்குவம் அடைதல் என்பதைக் குறிக்கும். எனவே, மனிதர்களைப் பக்குவம் அடையச் செய்வதே, சமயத்தின் நோக்கம் ஆகும்.

'' பகுத்தறிவு '' என்பது, அறிவுடைப்பொருள் எது? அறிவற்ற பொருள் எது? என்பனவற்றைப் பகுத்து எதனுடன் தொடர்பு கொண்டால் பக்குவம் ஏற்படும் என்பதை அறிவது ஆகும். இவ்வுண்மையைச் சைவ சமய அறிவியல் நூல் ஆகிய '' உண்மை விளக்கம் ''

'' சித்து அசித்து இவற்றைப் பகுத்தறிவது ஆன்மாவே ''

என்று பேசுகின்றது.

பகுத்தறிவுக்குப் பொருத்தமான முறையில் நம்மைச் சிந்திக்க வைத்துப், பக்குவப்படுத்துவது எதுவோ; அதுவே சமயம் எனப்படும். இந்த அடிப்படையில் சிந்தனைக்கு உரியதாக இருப்பது, சித்தாந்த சைவ சமயம் ஒன்றே ஆகும். இதனைச் சைவ சித்தாந்தம் என்று கூறுவர்.

இந்நூலில் சைவ சித்தாந்தம் எந்த அளவு பகுத்தறிவுக்குப் பொருத்தமாக உள்ளது என்பது ஓரளவு நிறுவப் பட்டுள்ளது. சைவ சித்தாந்தக் கொள்கைகளை எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்தோடு இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

சைவ சித்தாந்தம் கொள்ளும் முப்பத்தாறு தத்துவங்களைக் குறித்து எளிமையான விளக்கமும் இதில் இடம் பெற்றுள்ளது.

சைவ சித்தாந்தத்தைப் புரிந்து கொள்ள விரும்புபவர்களுக்கும், பகுத்தறிவுக்குப் பொருந்தும் வகையில் சமயக் கொள்கைகளைச் சிந்திக்க விரும்புபவர்களுக்கும் இந்நூல் நிச்சயம் பயன்படும் என்று நம்புகிறேன்.

அடியேன்,

திருவிடைமருதூர்,
5—11—1996

கு. வைத்தியநாதன்
இயக்குநர்.

உ

சிவமயம்

# பொருளடக்கம்

## I பகுத்தறிவுச் சமய சிந்தனைகள்

# II முப்பத்தாறு தத்துவ விளக்கம்





உ

சிவமயம்

# " பகுத்தறிவுச் சமய சிந்தனைகள் "



## தோற்றுவாய் :

சைவ ஆகமங்கள் நான்கு பாதங்களை உடையன. அவை சரியா பாதம், கிரியா பாதம், யோக பாதம், ஞான பாதம் எனப்படும். அவற்றுள் சரியா பாதம், வழிபாட்டு முறைகளைக் கூறும். கிரியா பாதம், திருக்கோயில் அமைப்பைக் கூறும். யோக பாதம், தனித்திருந்து வழிபாடு செய்வதைப் பற்றிப் பேசும்.

ஞான பாதம், சைவ சமயம் கொள்கின்ற உண்மைப் பொருள் குறித்தும், அவற்றின் இயல்பு பற்றியும் கூறுகின்றது. இவற்றைப் பற்றிய ஆராய்ச்சியும், அவ்வாராய்ச்சியின் முடிவும் " சைவ சித்தாந்தம் " எனப் பெயர் பெறும்.

பொருள்களைக் குறித்து ஆராயும் பொழுது, பிற சமயங்கள் முடிவாகச் சொன்னவற்றைக் கருத்தில் கொண்டு சிந்தித்து, இதுவே முடிந்த முடிவு என்று, எவராலும் மறுக்க முடியாததொரு முடிவைக் கூறுவதால், இந்த ஆராய்ச்சி முடிவுக்கு " முடிந்த முடிவு " ( End to the ends ) என்னும் பெயர் ஏற்படலாயிற்று.

## சைவசித்தாந்தப் பயிற்சியின் இன்றியமையாமை.

பல்வேறு துறைகளில் உள்ளவர்களும் இக்காலத்தில் சமயச் சொற்பொழிவு செய்வதில் ஆர்வம் காட்டுகிறார்கள். ஆயினும் சமய அறிவு பற்றிய தெளிவு இல்லாமையால், அவர்களது பேச்சில் பல தவறுகள் தென்படுகின்றன. எனவே, தெளிவான சமய அறிவைப் பெற விரும்புபவர்கள் அனைவரும், சைவ சித்தாந்தம் பயில வேண்டுவது இன்றியமையாதது ஆகும்,

மத சம்பந்தமான பல்வேறு வகையான கருத்துக் குழப்பங்கள் உள்ளன. அவற்றுள் சில வருமாறு :-

1. கடவுள் உண்டு என்பதைப் பகுத்தறிவு வாதிகளும் மறுக்க முடியாத அளவுக்கு எப்படி விளக்குவது ?

2 இந்த உலகத்தைக் கடவுள் ஏன் படைத்தார் ?

3. உயிர்களையும் கடவுள்தான் படைத்தாரா? அவ்வாறாயின், அவற்றைத் துன்பம் இல்லாதனவாக ஏன் படைக்கவில்லை ?

4. மறுபிறப்பு உண்டா ?

5. ஊழ்வினையை வெல்வதற்கு நேர்மையான வழி யாது ? என்பன போன்ற வினாக்கள் நமது மனத்தில் எழுகின்றன. ஆயினும், இவற்றிற்கு விடை காணுமலே நமது வாழ்நாட்கள் ஓடிக்கொண்டிருக்கின்றன இவற்றிற்குச் சைவ சித்தாந்தம் ஒன்றே அறிவுக்குப் பொருந்துமாறு விடை கூறுகிறது.

## சைவ சித்தாந்தம் கொள்ளும் பொருள்கள்,

சைவசித்தாந்தம் முப்பொருள் உண்மையைப் பேசுகிறது. அவை இறை, உயிர், தளை என்பனவாகும். அஃதாவது அறிவிக்காமலே அறியும் பொருள் இறைவன்; அறிவித்தால் அறியும் பொருள் உயிர். அறிவித்தாலும் அறியாத பொருள் சடம் ஆகிய உலகம், இவற்றைத் திருமந்திரம்,

''பதி, பசு, பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல் பசு பாசம் அநாதி''

என்று ஓதுகின்றது. அறிவற்ற சடப்பொருள் ஆகிய பாசம், ஆணவம், கன்மம். மாயை என்று மூன்ருகப் பேசப்படும்.

எனவே கடவுள் உண்டு; கடவுளின் வேறு ஆகிய உயிர்கள் உண்டு; உயிர்க்கு அறியாமையைச் செய்யும் ஆணவ மலம் உண்டு; உயிர்க்கு ஏற்பட்ட அறியாமையைப் போக்கும் ஒளிப்பொருள் ஆகிய மாயை உண்டு; உயிர்க்கு அனுபவ அறிவைத்தரும் கன்மம் உண்டு என்கிறது சைவ சித்தாந்தம்

இந்த ஐந்துபொருள்களும் என்றும் உள்ளவை. இவை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றவில்லை. ஒவ்வொன்றும் அதனதன் அளவில் வியாபகமாகவே உள்ளது; காலத்தினாலும் இடத்தினாலும் கட்டுப்படாதவை. எனவே, இவை அநாதியே உள்ளன என்கிறது சைவ சித்தாந்தம்.

"அநாதி" என்பது ஆதி அற்றது என்பதைக் குறிக்கும். ஆகவே இவற்றிற்குத் தொடக்கமும் இல்லை; முடிவும் இல்லை.

இவ்வுண்மையைத் தெளிவுறுத்தும் பொருட்டு,

"விளையாத தோர் பரிசில் வரு பசு, பாச, வேதனை, ஒண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்" (1 - 12 - 3)

என்று திருஞான சம்பந்தப் பெருமான் அருளிச் செய்துள்ளார். "விளையாததொரு பரிசு" என்பது, அநாதியே உள்ளதாம் தன்மையைக் குறிக்கும்.

## பொருள் நிச்சயம் கொள்ளும் முறை.

ஒரு பொருள் உண்டா இல்லையா என்பதை அறிவதற்குச் சைவ சித்தாந்தம், தருக்க நூல் கூறும் அளவை முறைகளைக் கொண்டு அளந்தறிகிறது, அஃதாவது காரண காரிய அடிப்படையில் ( Logical ) வைத்துப் பேசுகின்றது.

உலகில் உள்ள பருப்பொருள்களை, நீட்டல் அளவை, நிறுத்தல் அளவை, முகத்தல் அளவை, வாயிலாக அளந்து அறிகிறோம், அவ்வாறே, கண்ணினால் காணமுடியாத இந்த ஐந்து அருவப் பொருள்களையும், சைவ சித்தாந்தம் காண்டல் அளவை, கருதல் அளவை, உரை அளவைகளின் வாயிலாக அளந்து அறிகிறது

"காண்டல் அளவை" காட்சி அளவை என்றும் கூறப்படும். கண்ணால் கண்டு பொருளின் உண்மையை அறிவது காண்டல் அளவை எனப்படும். இதனைப் பிரத்தியட்ச பிரமாணம் என்று வடமொழியில் கூறுவர்.

"கருதல் அளவை" அனுமான பிரமாணம் என்று கூறப்படும். ஒரு பொருளின் இருப்பைக் கண்ணால் காணாமலே, அந்தப் பொருளில் உள்ள இயல்பைக் கொண்டு, அப்பொருள் இருக்கவேண்டும் என்று கருதி, அதன் உண்மையை ஏற்றுக் கொள்வதாகும். எடுத்துக் காட்டாக, மலையின் மேல் புகை தெரிகிறது, நெருப்பைக் காணவில்லை. நெருப்பின் இயல்பு ஆகிய புகையைக் கொண்டு, மலையின்மேல் நெருப்பு உள்ளது என்பதைக் கருதி அறிவது, கருதல் அளவை ஆகும்.

"உரை அளவை" என்பது. காண்டல் அளவையாலும் கருதல் அளவையாலும் அளந்து அறிய முடியாத பொருளின் உண்மையை, அனுபவம் உடைய அருளாளர்களின் திரு வாக்குகளைக் கொண்டு உணர்வதாகும். இதனை ஆகம பிரமாணம் அல்லது சப்த பிரமாணம் என்று வடமொழியில் கூறுவர்.

இவ்வாறு அளக்கப்படும் கருவிகளின் துணைக் கொண்டு, பொருள்களின் உண்மையை அளந்து அறியும் உயிரின் அறிவே, சைவ சித்தாந்தத்தில் பிரமாணம் எனப்படும். படவே, நமது அறிவுக்கு எது சரி எனப்படுகிறதோ, அஃதே அப்போதுள்ள நமது அறிவின் வளர்ச்சிக்கு ஏற்ப, உண்மையான பிரமாணம் ஆகும். ஆகவேதான் அருளாளர் களின் அனுபவ வாக்குகளைப் பரமபிரமாணம் என்கிறார்கள்.

பிரமாணம் என்பதை உலக வழக்கில் ஆதாரம் ( Evidence ) என்பர். நமது அறிவு எந்த ஆதாரத்தைக் கொண்டு தெளிவு பெறுகிறதோ, அதுவே பிரமாணம் எனப்படும். எனவே, எந்தவிதக் குழப்பமும் இன்றித் தெளிவாக அறியும் அறிவின் முடிவே சித்தாந்தம் ஆகும்.

## அடிப்படை ஆதாரம் அல்லது சற்காரிய வாதம்

பொருள்களின் உண்மையைச் சைவ சித்தாந்தம், விஞ்ஞான அடிப்படையில் வைத்து நிலை நாட்டுகிறது, விஞ்ஞானம் எந்த ஒரு பொருளையும் இல்பொருள் என்று கூறவில்லை. இன்மையிலிருந்து எதுவும் தோன்றாது. (But for an involution there is no evolution) இந்த அடிப்படை ஆதாரத்தையே சைவசித்தந்தம் " சற்காரிய வாதம் " என்று பேசுகின்றது

சற்காரிய வாதம் என்ருல், "இல்லது தோன்றாது ; உள்ளது அழியாது " என்பது பொருளாகும், சத் + காரியம் + வாதம். சற்காரியவாதம். சத்து - என்றும் உள்ளது; காரியம் - செயற்படுவது ; வாதம் - கொள்கை.

எடுத்துக் காட்டாக, நம் முன்பு காட்சிப்படும் இவ் வுலகம், இவ்வாறு செயல் படுவதற்கு முன்பும், செயல் படாத நிலையில் இருந்திருக்கிறது என்று கொள்வதே

சற்காரிய வாதம் எனப்படும், எனவே இக் கொள்கைக்கு மாறுன எந்தக் கொள்கையும் '' அசற்காரியவாதம் '' அல்லது '' அவசித்தாந்தம் '' என்று கூறப்படும்.

சைவ சித்தாந்தம் பெரும்பாலான உண்மைகளைக் கருதல் அளவையைக் கொண்டு நிறுவுகிறது. அந்நிலையில் சற்காரியவாத அடிப்படையையும் நினைவில் கொள்ள வேண்டும், அப்பொழுதுதான் அறிவுக்குப் பொருத்தமான உண்மை விளங்கும். சைவ சித்தாந்தக் கொள்கைகள் அனைத்தும் சற்காரியவாத அடிப்படையிலேயே நிறுவப் பட்டுள்ளன.

**ஆத்திகமும் நாத்திகமும்**

''நாத்திகம்'' என்ற சொல்லுக்கு. "இல்லை'' என்பது பொருள். ஆத்திகம் என்ற சொல் அதற்கு எதிர்ப்பதம். அஃது ''உண்டு'' என்னும் பொருளைத் தருவது, "கடவுள் இல்லை'' என்பவரை நாத்திகர் என்கிறோம். கடவுளைத் தவிர வேறு பொருள் இல்லை என்று கூறுபவர்களும் ஒரு வகை நாத்திகரே ஆவர்.

கடவுள் மட்டும் இருந்து, பிற பொருள்கள் இல்லை என்று சொன்னால் கடவுளின் எந்தச் செயலும் அர்த்த மற்றதாகவே இருக்கும், கடவுள் முழு நிறைவு உடையவர். அவரைத் தவிர வேறு பொருள் இருப்பதாகக் கூறினால், அவரது முழு நிறைவு பாதிக்கப்படும் என்று அவர்கள் கூறு கிறார்கள்.

பருப் பொருள்கள் கலந்து இருக்கும் பொழுது, ஒன்றின் வியாபகம் பிறிதொன்றினால் பாதிக்கப்படும் என்பது உண்மை. ஆனால், அருவப் பொருள்கள் அவ்வாறு கலந்து, நிற்கும் பொழுது அவற்றின் வியாபகம் தடைப்படுவதில்லை. இதனை ஓர் உவமையால் அறியலாம்.

நம்மைச் சுற்றி இப்பொழுது ஒளி நிறைந்திருக்கிறது. இந்த இடத்திலேயே இருளும் நிறைந்திருக்கிறது. சற்றுக் கண்ணை மூடித் திறந்தால், இவ்வுண்மையை எளிதில் புரிந்து கொள்ளலாம். எனவே ஒளியின் நிறைவுக்குச் சற்றும் குறைவு நேராத அளவு, இருளும் இருக்க முடியும் என்பது புலப்படு கிறது. இவ்வுண்மையை,

" ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் "

என்று " கொடிக்கவி " என்னும் நூலில் உமாபதி சிவம் அருளிச் செய்துள்ளார். இதிலிருந்து கடவுள் மட்டுமன்றி, உயிர்களும், ஆணவம், கன்மம், மாயை ஆகிய சடப் பொருள்களும் என்றும் உள்ளன என்பது பெறப்படும்.

இனி, இந்த ஐந்து பொருள்களின் உண்மையையும் அவற்றின் இயல்புகளையும் குறித்துச் சிந்திப்போம்.

## கடவுள்

### கடவுள் உண்மை

கடவுள் உண்டா என்னும் தடைக்கு விடை காண்பதற்கு, ஓர் எளிய வழி உள்ளது. " பகுத்தறிவு " என்னும் சொல்லைச் சற்று ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை புலப்படும். பகுத்து அறிவது பகுத்தறிவு. உலகில் உள்ள பொருள்கள் அனைத்தையும் பகுத்துப் பகுத்துப் பார்த்தால், அறிவுள்ளன, அறிவற்றன என்று இரண்டு வகைப் பொருள்களே இருப்பதை நாம் அறியலாம். இது " பகுத்தல் " ஆகும்.

அவ்விரண்டனுள் அறிவுடைப் பொருளின் தொடர்பு இல்லாமல், அறிவற்ற பொருள் எதுவும் இயங்கும் திறனுடையதாக இல்லை என்பது நமது அறிவுக்கு எட்டிய செய்தியே ஆகும். இஃது " அறிதல் " ஆகும்.

உடல் அறிவற்றது; உயிர் அறிவுடையது. நமது உடலை உயிராகிய நாமே இயக்குகிறோம். உடலை விட்டு உயிர் நீங்கியதும் உடல் இயங்குவதில்லை. உடலைப் போன்று உலகமும் அறிவற்றது. உடலை இயக்குவதற்கு உயிர் இருப்பதைப் போன்று, பெரிதாகிய உலகத்தை இயக்குவதற்கும் " பேருயிர் " ஒன்று இருந்தாக வேண்டும். அந்தப் பேருயிரையே, பேரறிவும் பேராற்றலும் உடைய " கடவுள் " என்கிறோம்

இவ்வுண்மையைத் திருவாசகம், திருப்பள்ளி எழுச்சியில்,

" உலகுக்கு உயிர் ஆனாய் " 9

என்று மாணிக்கவாசகர் அருளிச்செய்துள்ளார். எனவே "கடவுள் உண்டு" என்பதை ஏற்பவர் எவரோ, அவரே பகுத்தறிவுடையவர் என்பது தெளிவாகும்.

## கடவுளின் இயல்பு

கடவுள் என்னும் சொல் 'கட' என்னும் பகுதியையும் 'உள்' என்னும் விகுதியையும் உடையது. எல்லாப் பொருள்களையும், "கடந்து" நிற்பது, கடவுளுக்குச் சிறப்பு இயல்பு ஆகும். ஒவ்வொரு பொருளோடும் "கலந்து" நிற்பது கடவுளின் பொது இயல்பு ஆகும். அஃதாவது அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாக நிற்பதுவே, கலந்து நிற்றல் என்பதற்குப் பொருளுளாகும்.

இதற்கு ஓர் உவமை வருமாறு:-

கதிரவன் எல்லாப் பொருள்களையும் கடந்து நிற்கிறான்; அவனது கதிர்கள் ஒவ்வொரு பொருளிலும் கலந்து நிற்கின்றன. கதிரவனையும் கதிர்களையும் போல் இறைவன் சிவமாகவும் சத்தியாகவும் இருக்கிறான். இதுவே சைவ சித்தாந்தம் கொள்ளும் இறை இயல்பு ஆகும்.

## கடவுளுக்கும் குணம் உண்டு

உலகில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் தனித்தனி குணம் உண்டு. கடவுளை, "நிர்குணன்" "குணாதீதன்" என்றெல்லாம் உபநிடதங்கள் கூறுகின்றன. இதற்குப் பொருள், கடவுள் குணமே இல்லாதவன் என்பதன்று.

உயிர்க்குள்ள குணங்கள் மூன்று. அவை சத்துவம், இராசதம், தாமதம் என்பன ஆகும். "நிர்குணன்" என்ற சொல்லுக்கு, உயிர்க் குணம் ஆகிய முக்குணம் கடவுளுக்குக் கிடையாது என்பதே பொருள். 'குணாதீதன்" என்னும் சொல்லுக்குக் கடவுள் உயிர்க்குணங்களுக்கு அப்பாற் பட்டவன் என்றே பொருள்.

குணம் இன்றிக் குணி இல்லை. குணத்தை உடையது குணி. கடவுள் குணமே இல்லாதவர் என்று கூறினால், குணமில்லாத பொருள் இல்லை என்றாகிக், "கடவுள் இல்லை" என்பதாக முடியும். எனவே கடவுளுக்கும் குணம்

உண்டு எனக் கொள்வதே பொருந்தும். கடவுள் எண் குணங்களை உடையவர். இவ்வுண்மையை,

"எட்டுக் கொலாம் அவர் ஈறில் பெருங்குணம்"

என்று அப்பரடிகள் அருளிச்செய்துள்ளார். 'கடவுள் வாழ்த்து" என்னும் முதல் அதிகாரத்தில், திருவள்ளுவரும் கடவுளை "எண்குணத்தான்" என்றருளிச் செய்துள்ளார்

### கடவுளின் சிறப்பு இயல்பு

ஒவ்வொரு பொருளுக்கும் சிறப்பு இயல்பு, பொது இயல்பு, என்று இரண்டு இயல்புகள் உண்டு. கடவுளுக்குச் சிறப்பு இயல்பு 'சச்சிதானந்தம்' ஆகி நிற்றல் ஆகும். சத்து + சித்து + ஆனந்தம் = சச்சிதானந்தம், இதனைச் சிவாகமங்கள் 'எண்குணம்" என்கின்றன. எண்குணங்கள் வருமாறு :

| | | |
|---|---|---|
| 1. | தன் வயம் உடைமை | சத்து |
| 2. | தூய உடம்பினன் ஆதல் | |
| 3. | இயல்பாகவே பாசமின்மை | |
| 4. | முடிவில் ஆற்றல் உடைமை | |
| 5. | இயற்கை உணர்வுடைமை | சித்து |
| 6. | முற்றுணர்வு உடைமை | |
| 7. | பேரருள் உடைமை | |
| 8. | வரம்பில் இன்பம் உடைமை | - ஆனந்தம். |

இந்த எட்டுக் குணங்களையும் முதல் எட்டுத் திருக்குறட் பாக்களில் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். ஒன்பதாவது குறட்பாவில் "எண்குணத்தான்" என்கிறார்.

### சிவ - சத்தி நிலை

சிவமும் சத்தியும் வெவ்வேறு பொருள்களல்ல. அஃதாவது அவை தனித்தனி முதல்கள் அல்ல. ஒரே பொருளின் குணி குணத் தன்மையே சிவசத்தி நிலை ஆகும், சிவம் முதல் (subject). சத்தி, சிவத்தின் தன்மை (ATTRIBUTE) ஆகும். எண்குணத்தை உடைய குணி சிவம். எண்குணமாயிருப்பது சத்தி.

சிவ சத்தியின் இந்த இயைபை "தாதான்மியம்" என்பர். இதனைத் தமிழில் "தற்கிழமை" என்று கூறுவர். இத்தகைய இயைபு, உலகில் உள்ள ஒரு பொருளுக்கும் பிறிதொரு பொருளுக்கும் உள்ள தொடர்பு போல்வதன்று. அஃதாவது ஒரே பொருள் இரண்டு விதமாகப் புலப்படுவதொரு பான்மை (Natural Union) ஆகும். ஆகவேதான் "சிவமின்றிச் சத்தி இல்லை சத்தி இன்றிச் சிவம் இல்லை;என்கிறோம். சிவமே சத்தியாக நிற்கிறது; சத்தியே சிவமாக நிற்கிறது. இவ்வுண்மையைச் சிவஞானசித்தியார்,

"அருளது சத்தி ஆகும் அரன்தனக்கு; அருளை இன்றித்
தெருள்சிவம் இல்லை ; அந்தச் சிவம் இன்றிச் சத்தி இல்லை"

என்று ஓதுகின்றது. சிவமும் சத்தியும் ஒன்றை விட்டு ஒன்று பிரிப்பின்றி நிற்பதே கடவுளின் சிறப்பு இயல்பு ஆகும்.

## பொருள்களின் இயல்புகள்

சைவ சித்தாந்தம் கொள்ளும் ஐந்து பொருள்களுள், ஒவ்வொன்றும் இருவேறு இயல்புகளை உடையது. ஒன்று சிறப்பு இயல்பு; மற்றொன்று பொது இயல்பு. சிறப்பியல்பு சொரூப இலக்கணம் எனப்படும். பொது இயல்பு தடத்த இலக்கணம் என்று பேசப்படும்.

ஒரு பொருள், பிற பொருளோடு தொடர்பு கொள்ளாமல், தன் அளவில் நிற்பது, அதற்கு அது சிறப்பு இயல்பு ஆகும். அஃது அப்பொருளின் காரண வடிவு எனப்படும். ஒரு பொருள், தன் அளவில் மட்டும் நில்லாமல், பிற பொருளோடு தொடர்பு கொண்டு நிற்கும் நிலை அப்பொருளுக்குப் பொது இயல்பு ஆகும். அஃது அப்பொருளின் காரிய வடிவு எனப்படும்.

காரண வடிவில் நிற்றல் என்பது, தன் அளவில் எந்த மாறுதலும் இன்றிப், பிற பொருளோடு தொடர்பு இன்றி நிற்றலைக் குறிக்கும். காரிய வடிவில் நிற்றல் என்பது, தன் இயல்பை வெளிப்படுத்தி நிற்பதோடு, பிற பொருளோடு தொடர்பு கொண்டு நிற்றலையும் குறிக்கும். பொருள்களின் இயல்புகளைப் பற்றிய இந்த அடிப்படைகளை நன்கு நினைவில் பதிப்பித்துக் கொள்ள வேண்டும்.

## கடவுளின் பொது இயல்பு.

கடவுளின் பொது இயல்பு இரண்டுவிதமாக உள்ளது. ஒன்று, தன் அருளையே திருமேனியாகக் கொண்டு பல்வேறு வடிவங்களைக் கொள்வது. மற்றொன்று, தன் பேரருளால் உயிர்களோடும் பிற சடப்பொருள்களோடும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் ஒரே நேரத்தில் நிற்பது.

இறைவன் இவ்வாறு பொது இயல்பில் நிற்பதற்குக் காரணம், உயிர்கள் மலநீக்கம் பெற்று, இறை இயல்பைப் பெற வேண்டும் என்னும் பெருநோக்கே ஆகும். இறைவனும் உயிர்களும் வெவ்வேறு பொருள்கள் என்னும் உண்மையை ஏற்காதவர்கள், இறைவன் பொது இயல்பில் நிற்பதற்கான காரணத்தைப் புரிந்து கொள்ள முடியாது.

முதலில் இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் பொது இயல்பு பற்றி ஓரளவு சிந்திப்போம்.

## ஒன்றாய் நிற்றல்

உடலில் உள்ள உயிர், உடலோடு கலப்பினால் ஒன்றாய் நிற்பது போல, இறைவன் உயிரோடு கலந்து ஒன்றாய் நிற்கிறான். உயிர், உடலோடு ஒன்றாய்க் கலந்து நின்றாலன்றி, உடல் நிலை பெறாது. அதுபோல, இறைவன் உயிரோடு ஒன்றாய்க் கலந்து நின்றாலன்றி உயிர் நிலை பெறாது எனவே, உயிர் நிலை பெறும் பொருட்டு இறைவன் உயிரோடு ஒன்றாய்க் கலந்து நிற்கிறான்.

''ஒன்றாய் நிற்றல்'' என்பது, இறைவன் தனது வியாபகப் பெருவெளியில், உயிர்கள் தங்கும் பொருட்டு, அவற்றிற்கு இடம் கொடுத்து நிற்பது ஆகும். இஃது ஒருதாய் தன்மடியில் தன் குழந்தைக்கு இடம் கொடுத்து இருப்பதைப் போலாகும்.

மற்றும் ஓர் உவமை வருமாறு :

பல குரல்களில் பேசும் ஒருவன், தன்குரலுக்கு எந்தக் கேடும் நேராமல், பிறர் குரல்களுக்குத் தன் குரலில் இடம் கொடுத்துப் பேசுவதைப் பார்த்திருக்கிறோம். அதுபோலவே இறைவன் தன் வியாபகத்திற்கு எந்தக் குறைவும் ஏற்படாமல் உயிர்களுக்கும் பிற சடப் பொருள்களுக்கும் தன் முழு

நிறைவு ஆகிய வியாபகத்தில் இடம் கொடுத்து நிற்கிறான். அஃதாவது அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய் நிற்பதே "ஒன்றாய் நிற்றல்" என்பதற்குப் பொருளாகும். இதனை, "அது அதுவாய் நிற்றல் அவன் இயல்பு" என்று நூல்கள் கூறுகின்றன.

ஓரிடத்தில் இரண்டு பொருள்கள் இருக்குமாயின், ஒரு பொருளின் நிறைவுக்குக் குறைவு ஏற்பட்டு விடுமே என்னும் ஐயம் சிலருக்கு ஏற்படலாம். வியாபகமாய் நிற்கும் பொருள்களுக்கு, நிறைவு கூறும் பொழுது, அவற்றின் தன்மையையும் கருத்தில் கொண்டு நோக்கினால், இது போன்ற ஐயம் எழாது.

பருப்பொருள்கள் அவ்வாறு நிற்குமாயின், அவற்றின் வியாபகம் தடைப்படும் எனக் கொள்வது பொருந்தும். நுண்பொருள்கள் அருவமாக இருப்பதால், அவை ஒன்றுக்கு ஒன்று குறைவுறாமல் வியாபித்து நிற்க முடியும்.

இதனை ஓர் உவமை வாயிலாக அறியலாம். ஓரிடத்தில் பல்லி செத்துக் கிடந்த துர்நாற்றம் வீசுகிறது. அப்பொழுது ஓர் ஊதுபத்தியைக் கொளுத்தி வைத்தால், அந்தத் தீநாற்றம் அடங்கிப் போவதைக் காண்கிறோம். அங்கே பல்லி செத்த வாடையும் ஊதுபத்தி மணமும் அதனதன் அளவில் வியாபித்து நிற்பதை அறியலாம். ஆகவே இறைவனது வியாபகத்தில் உயிர்கள் தங்குவதால், இறைவியாபகத்திற்கு எந்தப் பங்கமும் நேராது என்பது தெளிவு.

கடவுள் எல்லாமாக முடியும், எல்லாம் கடவுளாக முடியாது (God is all; all are not God). இவ்வாறு உயிர்களோடும் பிற சடப் பொருள்களோடும் ஒன்றாய்க் கலந்து நிற்பது என்பது, எல்லாம் வல்ல இறைவன் ஒருவனாலேயே முடியும்.

### வேறாய் நிற்றல்

சூரியன் வேறு; கண்வேறு. இரண்டும் வெவ்வேறு பொருள்கள். அவ்வாறே கடவுளும் உயிரும் வேறு வேறு பொருள்கள். சூரிய ஒளியின் உதவி இன்றிக் கண் எதையும்

காண முடியாது. அது போலவே, இறையருளின் உதவி இன்றி, உயிர் எதனையும் அறிய முடியாது. எனவே இறைவன் உயிரினின்றும் வேறாயும் நிற்கிறான் என்கிறோம்.

இறைவன் உயிரோடு ஒன்றாய் மட்டும் நின்றால், உயிர்கள் இறைவனது முழுநிறைவில் கட்டுப்பட்டே நிற்கும். இவ்வாறு நிற்பதால், உயிருக்கு எந்தப் பயனுமில்லை. உயிர்கள் அறிவிக்க அறியும் இயல்பு உடையன, எனவே உயிருக்கு அறிவிக்கும் பொருட்டு, இறைவன் உயிர்களின் நின்றும், வேறாயும் நிற்க வேண்டுவது இன்றியமையாததாகும்.

உடனாய் நிற்றல்

பொருள்களைக் காணும் திறன் கண்ணுக்கு இயல்பாகவே உள்ளது. ஆயினும், உயிரின் அறிவு கண்ணுடன் கூடி நின்று, அக்கண்ணைச் செலுத்தினாலன்றிக் அக்கண் எதையும் காண முடியாது.

அவ்வாறே உயிர்க்கு எதையும் அறியும் திறன் இயல்பாகவே உள்ளது. எதையும் விரும்பும் திறன் இயல்பாகவே. உள்ளது; எதையும் செய்யும் ஆற்றல் இயல்பாகவே உள்ளது. ஆயினும் இறைவன் உயிருடன் கூடி நின்று, உயிரைச் செலுத்தினாலன்றி உயிரின் அறிவும் விருப்பமும் செயலும் தனித்து நின்று தொழிற்படா.

எனவே, கண்ணின் ஒளியும் உயிரின் அறிவும் போல உயிர்க்கு உயிராதல் தன்மையால், இறைவன் உயிர்களோடு உடனாயும், அத்துவிதமாய்ப் பிரிப்பின்றி நிற்கின்றான். அறிவிக்க அறியும் உயிரின் அறிவு, விருப்பம், செயல்களுக்கு ஏற்ப, இறைவன் அவற்றை இயக்கினால் அன்றி, தானே தனித்து இயங்கும் ஆற்றல் உயிர்க்கு இல்லை. ஆகவே, இறைவன் உயிரோடு உடனாய் நின்றாலன்றி, உயிர் எதையும் அனுபவிக்க முடியாது.

இது, மாணவன் ஒருவன் எண்ணிக்கை முறையை அறிந்து கொள்ளும் பொருட்டு, ஆசிரியர் ஒருவர் தாமும் தம் விரலை விட்டு எண்ணிக் காட்டி, மாணவனை எண் முறையை அறியச் செய்வதைப் போன்றதாகும்.

### மூன்றுமாய் நிற்றல்

ஒன்றாய் நிற்றலுக்குப் பயன், உயிர்களும் பிற சடப் பொருள்களும் நிலைத்து நிற்றல் பொருட்டு ஆகும். வேறாய் நிற்றலுக்குப் பயன், உயிர்களுக்கு அறிவித்தல் பொருட்டும், சடப் பொருள்களை இயக்குதல் பொருட்டும் ஆகும். உடனாய் நிற்றலுக்குப் பயன், உயிர்கள் தம் அறிவிச்சை செயல்களைக் கொண்டு, தாம் விரும்பியவாறே, அனுபவித்தல் பொருட்டும், சடப்பொருள்கள் இயங்குதல் பொருட்டும் ஆகும்.

இறைவன், இவ்வாறு ஒரே சமயத்தில் மூன்றுமாய் நிற்றல் அன்றி, ஒன்றாய் மட்டுமோ, வேறாய் மட்டுமோ, உடனாய் மட்டுமோ நிற்பானாயின், அதனால் உயிர்க்கு யாதொருபயனும் இல்லை என்பதை நாம் நன்றாக விளங்கிக் கொள்ள வேண்டும். இதுவே, சைவ சித்தாந்தம் முழக்கும் "அத்துவிதக் கொள்கை" ஆகும்.

இந்த இடத்தில் ஓர் உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும். உயிர்களின் விருப்பத்திற்கு ஏற்பவே, இறைவன் அவற்றை இயக்குகிறான்; எனவே உயிர்கள் செய்கின்ற வினைகளுக்கு இறைவன் பொறுப்பாளி ஆகமாட்டான். எனவே "வினைப்பயன் அவனுக்கு அன்றி இவனுக்கு ஆயின" என்பார் சிவஞான சுவாமிகள். இதிலிருந்த இறைவனே எல்லாவற்றிற்கும் பொறுப்பு என்னும் எண்ணம் பிழையானது என்பது பெறப்படும்.

### இறைவன் உருவம் கொள்ளுதல்:

உயிர்கள் முன்னேறும் பொருட்டே இறைவன் அனைத்துச் செயல்களையும் செய்து வருகிறான். அவற்றுள், அவன் தன் அருளையே வடிவமாகக் கொண்டு, உருவம் கொள்ளுதலும் ஒன்றாகும்.

இறைவன் எண்ணில் அடங்கா வடிவங்களைக் கொண்டு உள்ளான். அவற்றுள் நடராசர் திருவுரு, ஐந்தொழில் அமைப்பைத் துல்லியமாகக் காட்டுவது. உடுக்கை ஏந்திய வலது திருக்கரம் படைத்தல் தொழிலைக் காட்டுகிறது. அமைந்த மற்றொரு வலது திருக்கரம் காத்தல் தொழிலைக்

குறிக்கும். அனல் ஏந்திய இடது திருக்கரம் அழித்தல் தொழிலை அறிவிக்கும். முயலகன் மீது ஊன்றிய வலது திருப்பாதம் மறைத்தல் தொழிலைக் குறிக்கும். தூக்கிய இடது திருவடி அருளல் தொழிலை உணர்த்தும். மற்று மோர் இடது திருக்கரம், அருளலை உணர்த்தும் இடது திருவடியைச் சுட்டிக் காட்டுகின்றது. இதிலிருந்து இறை வனாகக் காட்டினாலன்றி உயிர்கள் அவனை அடைய முடியாது என்பது பெறப்படும்.

உயிர் உருவம் இல்லாதது. இறைவனே உயிருக்கு உரு வத்தை வழங்கியிருக்கிறான். இறைவன் கொடுத்த இந்த உடம்பைக் கொண்டே இந்த உலகத்தை நாம் அனுபவிக் கிறோம். உருவமின்றி நம்மால் எதையும் சிந்திக்கக் கூட முடியாது. உருவத்தில் கண்டவற்றையே உள்ளத்தில் வைத்து தியானிக்க முடியும். Man things by pictures எனவே உருவ வழிபாடு இன்றியமையாத தாகும்.

அறிவிக்க அறியும் உயிர்க்குள்ள அறியாமையைப் போக்கும் பொருட்டே இறைவன் உருவம் கொள்கிறான் என்று திருமுறைகள் முழக்குகின்றன.

இறைவன் தென்முகக் கடவுளின் வடிவில் கல் ஆல மரத்தின் கீழ் அமர்ந்து, அநாதியே நால்வர்க்கு, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் தமிழ் நான்மறையைப் போதித்தான்; அவ்வாறு அவன் அன்று போதிக்காவிட்டால், உலகத்தில் உள்ள மனிதர்கள் எப்படி வாழ்வது என்பதை அறியாமல் இருந்திருப்பர். இவ்வுண்மையைத் திருவாசகம்,

'' அருந்தவர்க்கு அறம் முதல் நான்கு அன்று அருளிச்செய்திலனேல்,
திருந்தவருக்கு உலகு இயற்கை தெரியாகாண் சாழலோ '' - 274

என்று ஓதுகின்றது.

இதிலிருந்து இறைவன் வடிவம் கொள்வதன் நோக்கம், உண்மைகளை உயிர்களுக்கு உணர்த்துதல் பொருட்டே என்பது புலப்படும். வடிவமின்றி அறிவுறுத்தினால், அஃது அசரீரி ஆகும். அஃது ஆழமாக அறிவில் பதியாது. ஒலி வாயிலாகப் பெறும் அறிவைவிட ( AUDIO ), ஒளி வாயிலாக உணர்த்தப் பெறும் அறிவு ( VIDEO ) ஆழமாகப் பதியும் என்பது அறிவியல் உண்மை.

## ஐந்தொழில் ஆற்றுதல்

உருவம் கொள்ளும் நிலையில், இறைவன் உயிர்கள் முன்னேறும் பொருட்டு ஐந்தொழில் ஆற்றுகிறான். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன ஐந் தொழில்கள் எனப்படும். அவற்றுள்,

"படைத்தல்" என்பது, மாயையிலிருந்து தனு (உடல்)' கரணம் (மனம் முதலிய உட்கருவிகள்), புவனம் (உலகம்), போகம் (அனுபவிக்கும் அனைத்துப் பொருள்கள்) ஆகியன வற்றைத் தோற்றுவித்து உயிர்களுக்கு வழங்குவது ஆகும்.

"காத்தல்" என்பது, அவ்வாறு தோற்றுவிக்கப் பட்டவற்றை, ஒருகால எல்லைவரை நிறுத்தி வைத்து, உயிர்களுக்குப் பயன்படுமாறு செய்தல் ஆகும்.

"அழித்தல்" என்பது, பிறவிகள் தோறும் உயிர்கள் செய்யும் வினைகள் காரணமாக, அவற்றிற்கு ஏற்படும் இளைப்பு நீங்குதல் பொருட்டு, தோற்றுவிக்கப் பட்டவற்றை மாயையில் ஒடுக்குதல் ஆகும்.

சைவ சித்தாந்தத்தில் இப்பொருள் என்று எதுவுமே இல்லை; எனவே "அழித்தல்" என்ற சொல்லுக்கு இல்லாமற் செய்தல் என்பது பொருளன்று; தோற்றுவிக்கப்பட்ட உலகம் முதலிய காரியப் பொருள்களைக், காரணப் பொருள் ஆகிய மாயையில் ஒடுக்குதல் என்பதே பொருளாகும்.

"மறைத்தல்" என்பது, ஆணவமலப் பற்றுக்கொண்டு, உலகத்தை நோக்கி நிற்கும் உயிர்களுக்கு, இறைவன் தன்னை மறைத்து, உலகத்தைக் காட்டி நிற்றல் ஆகும்.

"அருளல்" என்பது, ஆணவமலப்பற்றை விட்டுத் தன்னையே வேண்டி நிற்கும் உயிர்களுக்குத் தன் அருள் வாயிலாகத் தன்னைக்காட்டித் தன் திருவடியைச் சாருமாறு செய்தல் ஆகும்.

ஆகவே, இறைவன் ஐந்தொழில் ஆற்றுவதன் இன்றிய மையாமை தெளியலாயிற்று. அதனால், ஐந்தொழில் ஆற்று பவனே கடவுள் என்பது போதரும்.

## உயிர் உண்மை

தங்கம் வேறு செம்பு வேறு; தங்கத்தில் களிம்பு பற்றுவதில்லை. செம்பில் களிம்பு பற்றும். தங்கத்திலிருந்து செம்பு வந்ததில்லை. அவ்வாறே கடவுளிடமிருந்து உயிர் வந்ததில்லை.

தங்கத்திலிருந்து ஒரு துண்டை வெட்டிப் பார்த்தால், அந்தத் துண்டிலும் தங்கத்தின் தன்மை இருக்கும். அதுபோல கடவுளிடமிருந்து உயிர் வந்திருக்குமாயின், உயிரிடமும் கடவுளின் இயல்பு இருக்கவேண்டும்; ஆனால் நடைமுறையில் அப்படி இல்லை. எனவே, உயிர் கடவுளின் ஒரு கூறு என்பது பொருத்தமற்ற வாதம்.

கடவுள் சுயநலம் இல்லாதவர்; உயிர்கள் ஆகிய நாம் அனைவரும் சுயநலம் உடையவர்கள். கடவுள் எந்தத் தேவையும் இல்லாதவர். இதனை,

"வேண்டுதல் வேண்டாமை இலான்"

என்னும் திருவள்ளுவர் திருவாக்கு மெய்ப்படுத்துகின்றது. எந்தத் தேவையும் இல்லாத இறைவனுக்கு உயிர்களை உண்டாக்குவதால், எந்தப் பயனும் இல்லை. உண்டாக்கா விட்டால், அவனுக்கு எந்த இழப்பும் ஏற்பட்டு விடப் போவதில்லை.

உயிர்களைக் கடவுளே உண்டாக்கினார் என்பதை வாதத்திற்காக வைத்துப் பேசினால்,

1 உயிர்களை அவன் ஏன் உண்டாக்கினான்?

2 அவனால் உண்டாக்கப்பட்ட உயிர்களை அவன் ஏன் துன்பமுடையனவாக உண்டாக்க வேண்டும்?

என்னும் இரு தடைகளுக்கும் விடை கூறியாக வேண்டும். கடவுள் உயிர்களுக்கு நன்மையையே செய்பவர் என்பதை,

"நன்று உடையான்; தீயது இலான்" (1 - 98 - 1)

என்னும் திருஞானசம்பந்தர் திருவாக்கு மெய்ப்படுத்து கின்றது. எனவே துன்பத்திற்கு உள்ளாகும் உயிர்களை இறைவன் உண்டாக்கி இருக்கமாட்டான் என்பது தெளிவு.

எல்லாம் வல்ல இறைவன் உயிர்களை உண்டாக்க வில்லை என்பது, கடவுளின் எல்லா வல்லமைக்கு, இழுக்காகுமே என்று சிலர் குறைபட்டுக் கொள்கிறார்கள். "எல்லாம் வல்லமை" என்பதற்கு என்ன பொருள் என்பதை அறிந்துகொண்டால், இக்குறைபாடு நீங்கிவிடும்.

எல்லாம் வல்லமை (Almighty) என்பதற்கு என்ன எல்லாம் தேவையோ, அவற்றை எல்லாம் செய்யும் திறனுடைமை என்பதே பொருளாகும். அஃதாவது உயிர்கள் முன்னேறும் பொருட்டு, உயிர்களுக்குத் தேவையானவற்றைச் செய்யும் திறனுடைமையே ( Having all possible power that is acceptable for want of betterment of the soul – Oxford Dictionary ) எல்லாம் வல்லமை என்பதற்குப் பொருளாகும்.

இறைவன் எல்லாம் வல்லவன் என்று கூறுவதால் மட்டும் பயனில்லை. அந்த வல்லமை உயிர்களுக்கு எந்த அளவு பயன்படுகிறது என்பதைக் குறித்துச் சிந்திப்பதே, "எல்லாம் வல்லமை" பற்றிய தெளிவான ஆராய்ச்சி ஆகும்.

இதிலிருந்து கடவுள் என்று உள்ளாரோ அன்றிலிருந்து உயிர்களும் உள்ளன என்பது பெறப்படுகின்றது. இவ்வுண் மையைத் தாயுமானவர்,

"என்று உளை நீ, அன்று உளம் யாம்" ( 42-17 )

என்று அருளிச் செய்துள்ளார். எனவே, உயிர்கள் அநா தியே உள்ளன என்கிறது சைவ சித்தாந்தம்.

உயிர் இயல்பு :

அறிவு, விருப்பம், செயல்கள் மூன்றும் உடைய பொருள் எதுவோ, அதுவே உயிர் எனப்படும். புல்லுக்கும் உயிர் உண்டு. ஒவ்வோர் உயிரின் விருப்பமும் வெவ்வேறு விதமாக இருப்பதால், இயல்பு வேறுபாடு காரணமாக, "உயிர்கள் பல" என்கிறது சைவ சித்தாந்தம்.

உயிர், ஆன்மா என்னும் இரண்டு சொற்களும் ஒரே பொருளையே குறிக்கும்: ஆயினும் அறிவு விளக்கம் பெற்ற உயிர்கள் " ஆன்மா " எனப்படுகின்றன.

உடல் அறிவற்றது. உயிர் அறிவுடையது. எனவே உடல் வேறு, உயிர் வேறு ஆகும். உயிர்களுக்கு உடலைத் தருபவன் இறைவன். உடலில் உள்ள கருவி கரணங்களைக் கொண்டே உயிர் எதையும் அறிகிறது. தானாகத் தனித்து நின்று உயிர் எதையும் அறியாது. எனவே "அறிவிக்க அறியும் இயல்பு உடையது உயிர் " என்கிறோம்.

உயிர் ஏதேனும் பொருளைப் பற்றியே நிற்கும் இயல்புடையது. அப்படிப் பற்றி நிற்கும் பொழுது, அந்தப் பொருளின் தன்மையையே உயிர் பெற்று நிற்கிறது. (பற்றுதல் - சார்தல்) எனவே "சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது உயிர் " என்கிறோம்.

## உயிரின் பொது இயல்பு

முதன் முதலில் பிறவிக்கு வருவதற்கு முன்பு, அநாதியே உயிர் ஆணவமலத்தைப் பற்றித், தனது அறிவையும் செயலையும் நிகழ்த்த இயலாமல் நின்றது. அந்நிலையில் உயிர்க்கு உடல் ஏதும் கிடைக்கவில்லை. உயிரின் அந்த அறியாமை கண்டு இரக்கப்பட்டு, இறைவன் உயிர்க்குக் கருவி கரணங்களோடு கூடிய உடலை வழங்கினான். அதன் பின்பே உயிரின் அறிவும் செயலும் தொழிற்படலாயின. இவ்வாறு இறையருளால் கருவி கரணங்களோடு கூடி நின்று, உலக அறிவைப் பெறுகின்றமையால், அறிவிக்க அறியும் இயல்புடையது உயிர் எனப்படுகிறது. இவ்வாறு அறிவிக்க அறியும் இயல்பு உடைமையே உயிர்க்குப் " பொது இயல்பு " ஆகும்.

உலகத்தோடு தொடர்பு கொண்டு நிற்கும் பிறவி நிலையில், உயிர்க்கு ஐந்து அவத்தைகள் ஏற்படுகின்றன. ( அவத்தை - நிலை ). அவற்றை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பர். இவற்றைத் தமிழில் முறையே, நனவு நிலை, கனவு நிலை, உறக்க நிலை, பேருறக்க நிலை, உயிர்ப்படக்க நிலை என்று கூறுவர்.

ஒவ்வொரு நிலையிலும் உயிர், ஒவ்வோர் இடத்தில் நிற்கிறது; அந்நிலைகளில் ஒருசில கருவிகளோடு கூடியும் பிரிந்தும் நிற்கும். ஐந்து நிலைகளைப் பற்றிய விவரம் வருமாறு:-

1 ''நனவு நிலை'' ஆகிய சாக்கிர அவத்தையில், இலாடத்தானம் என்னும் புருவ மத்தியில் உயிர் நிற்கும். இதனை வலாடத்தானம் என்றும் கூறுவர். இந்நிலையில் உயிர் முப்பத்தைந்து கருவிகளுடன் நிற்கும். அக்கருவிகள் வருமாறு : -

ஞானேந்திரியம் ஆகிய அறிகருவிகள் ஐந்து, கன்மேந்திரியம் ஆகிய செயற்கருவிகள் ஐந்து, சப்தாது விடயம் ஐந்து, வசனாதி விடயம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிராணாதி வாயுக்கள் பத்து, புருடதத்துவம் ஒன்று ஆக முப்பத்தைந்து கருவி கரணங்கள்.

2 ''கனவு நிலை'' ஆகிய சொப்பன அவத்தையில், உயிர் கண்டத்தில் நிற்கும். அப்பொழுது தொழிற்படும் கருவிகள் இருபத்தைந்து. அவை வருமாறு : -

சப்தாதி விடயம் ஐந்து, வசனாதி விடயம் ஐந்து, பிராணாதி வாயுக்கள் பத்து, அந்தக் கரணம் நான்கு, புருடதத்துவம் ஒன்று ஆக இருபத்தைந்து கருவி கரணங்கள்.

3 ''உறக்க நிலை'' என்னும் சுழுத்தி அவத்தையில் உயிர் இதயத்தில் நிற்கும். அந்நிலையில் பிராணன், சித்தம், புருடன் என்னும் மூன்று கருவிகளுடன் உயிர் நிற்கும்.

4 ''பேருறக்க நிலை'' என்னும் துரிய அவத்தையில் பிராணன், புருடன் என்னும் இரண்டு கருவிகளுடன் உயிர் நாபியில் நிற்கும்.

5 ''உயிர்ப்படக்க நிலை'' என்னும் துரியாதீத அவத்தையில், புருடன் என்னும் ஒரே ஒரு தத்துவத்துடன் உயிர் மூலாதாரத்தில் நிற்கும்.

சப்தாதி விடயம் என்பது, அறிகருவிகளின் ஆற்றலைக் குறிக்கும். வசனாதி விடயம் என்பது, செயற் கருவிகளின் ஆற்றலைக் குறிக்கும். அஃதாவது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவை சப்தாதி விடயங்களாகும். தன்மாத்திரை

வேறு; சப்தாதி விடயம் வேறு, தன்மாத்திரை என்பது பஞ்ச பூதங்கள் தோன்றுவதற்குக் காரணமாய் இருக்கும் சூக்கும பூதங்கள் ஆகும்; விடயம் என்பது அனுபவத்தைத் தரும் ஆற்றலைக் குறிக்கும். இவை இந்திரியங்களுக்கு உட்கருவி யாக இருந்து, உயிர் கருவிகளோடு புறத்தே இயங்க உதவுவன ஆகும்.

ஐந்தவத்தைகளில், '' நனவு நிலை '' என்பது, நாம் விழித்து இருக்கும்பொழுது நிகழ்வது. எனவே இதனை '' விழிப்பு நிலை '' என்றும் கூறுவர். '' கனவு நிலை '' என்பது, நாம் உறங்கும் பொழுது, முழுமையாக நம்மை அறியாமலே நிகழும் '' சொப்பனம் " ஆகும். ''உறக்கநிலை'' என்பது, பெரும்பாலான கருவி கரணங்கள் ஒடுங்கி, அன்றாடம் நாம் தூங்கும்பொழுது நிகழ்வது. இதனை '' நித்திய கேவலம் " என்று கூறுவர்.

'' பேருறக்க நிலை " என்பது, ஏதேனும் ஒரு துயர நிகழ்ச்சியையோ, இன்பத்தில் திளைக்க வைக்கும் நிகழ்ச்சி யையோ கண்டாலும் கேட்டாலும் பெருமூச்செறிந்து நிற்பதைக் குறிக்கும். அந்நிலையில் தன் நிலையை மறந்து நிற்பர்.

'' உயிர்ப்படக்க நிலை '' என்பது, மேலே சொன்ன துயர இன்ப நிகழ்வுகளைக் கண்டாலும் கேட்டாலும் மூர்ச்சித்து மயங்கி கீழே விழுதலைக் குறிக்கும். அந்நிலையில் மூச்சு விடுவது சற்று நின்று பின்பு தொழிற்படும்.

ஐந்தவத்தை நிகழ்வது உயிர்க்குப் பொது இயல்பு ஆகும்.

**உயிர்க்குள்ள காரண நிலைகள் மூன்று :**

கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று காரண நிலைகள் உயிர்க்கு உள்ளன. அவற்றுள் '' கேவல நிலை " என்பது, பிறவிக்கு வருவதற்கு முன்பு, உயிர் ஆணவ மலத்தினால் மறைப்புண்டு, அறிவையும் செயலையும் இழந்து நிற்கும் நிலை ஆகும். ( கேவலம்-தனித்து இருத்தல்). '' சகல நிலை '' என்பது பிறவிக்கு வந்த பிறகு சகல கருவி கரணங்களோடு கூடி நிற்றலைக் குறிக்கும். '' சுத்த நிலை ''

என்பது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் நீங்கப் பெற்று, உயிர் தன்னோடு உடனாய் நிற்கும் சிவமாய் நிற்றலைக் குறிக்கும்.

கேவலமும், காரண கேவலம், காரிய கேவலம் என்றும், சகலமும் சகலத்தில் கேவலம், சகலத்தில் சகலம், சகலத்தில் சுத்தம் என்றும் பல்வேறு நிலை வேறுபாடுகள் உயிர்க்குப் பக்குவத்திற்கு ஏற்ப நிகழும். இவை பற்றிய விரிவான விளக்கங்களை நூல்களில் காணலாம்.

**உயிரின் சிறப்பு இயல்பு :**

உயிர் ஏதேனும் ஒன்றைப்பற்றி நிற்கும் இயல்பு உடையது என்பது முன்பே கூறப்பட்டது. அவ்வாறு பற்றி நிற்கும் பொழுது, தான் பற்றிய பொருளில் உயிர் அழுந்தி நிற்கிறது. எந்தப் பொருளில் அவ்வாறு அழுந்தி நிற்கிறதோ, அந்தப் பொருளின் தன்மையே உயிர் தன் தன்மையதாகும் இயல்பினை உடையது. ( பற்றுதல் – சார்ந்து நிற்றல் ) இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாம் தன்மை பெற்று நிற்பது உயிர்க்குச் சிறப்பு இயல்பாகும். இவ்வுண்மையைத் திருவள்ளுவர்,

'' நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் ; மாந்தற்கு
இனத்தியல்பது ஆகும் அறிவு ''

என்று அருளிச் செய்தார்.

சடப்பொருள்கள் ஆகிய மும்மலங்களைச் சார்ந்து நிற்பதைப் பார்க்கிலும், பேரறிவுடைப் பொருளாகிய இறைவனைச் சார்ந்து, இறைத்தன்மை பெறுவதே, சாதி ஒருமை பற்றி, உயிருக்குச் சிறப்பு இயல்பு ஆகும்.

சாதி ஒருமை என்பது, அறிவுடைப் பொருளாகிய உயிரும், பேரறிவுடைப் பொருளாகிய இறைவனும் அறிவுடைப் பொருள்கள் ஆதலினால், இரண்டும் ஒரே இனத்தைச் சேர்ந்தவை என்னும் பொருளில் கூறப்பட்டதாகும்.

எனவேதான், கருவி கரணங்களின் நின்றும் நீங்கி, தன்னோடு உடனாய் நிற்கும் சிவமாய் நிற்றல், உயிருக்குச் சிறப்பு இயல்பு எனப்படும்.

சார்ந்ததன் வண்ணமாம் தன்மை பெறுதல், பொது வகையால் உயிர்க்குச் சிறப்பு இயல்பு ஆகும்; கருவி கரணங்களின் நீங்கி உடனாய் நிற்கும் சிவமாய் நிற்றல், சிறப்பு வகையால் உயிர்க்குச் சிறப்பு இயல்பு ஆகும்.

பிறவிக்கு உட்பட்டிருக்கும் நிலை உயிர்க்குப் பொது இயல்பு ஆகும்; பிறவி நீங்கலுறும் நிலை உயிர்க்குச் சிறப்பு இயல்பு ஆகும்.

## ஆணவம்

### ஆணவமல உண்மை

உயிர்கள் ஆகிய நாம் பெரும்பாலும் துன்பம் உடையவர்களாகவே இருக்கிறோம். துன்பத்திற்குக் காரணம் அறியாமையே என்பது எல்லோரும் அறிந்ததோர் உண்மை. இந்த அறியாமை நமக்கு எப்படி வந்தது? இறைவன் இன்ப வடிவினன்; முழு அறிவுடையவன். எனவே துன்பத்திற்குக் காரணமான அறியாமை, இறைவனிடமிருந்து நமக்கு வந்திருக்க முடியாது.

இதிலிருந்து இறைவனைப் பாதிக்காத ஏதோ ஒரு பொருள், நம்மைப் பாதித்திருக்க வேண்டும் என்று எண்ண வேண்டியிருக்கிறது. அந்தப் பொருளே நமக்கு அறியாமையைச் செய்திருக்க வேண்டும். அதனைச் சைவ சித்தாந்தம் "ஆணவ மலம்" என்று பெயரிட்டுக் கூறுகின்றது.

அணுப்படுத்துவது ஆணவம். அணு மிகச்சிறிய பொருள்; சுருங்கிய பொருள், இயல்பாகவே வியாபகத் தன்மை உடைய நமது அறிவைச் சுருக்கிச் சிறுமைப்படுத்துவதால், அஃது "ஆணவம்" என்னும் பெயரைப் பெற்றது. "மலம்" என்னும் சொல், அழுக்கு என்னும் பொருளைத் தரும். உடலில் இருக்கும் அழுக்குப் போல உயிரிலும் அழுக்கு உள்ளது. உயிரின் இயல்பான தூய தன்மையைக் கெடுப்பதால் ஆணவம், மலம் என்றும் கூறப்படும். உயிரின் தூய்மையைக் கெடுத்து உயிருக்கு அறியாமையைச் செய்வது

இஃது ஒன்றே ஆகலின் அஃது "ஆணவமலம்" எனப் படுகிறது.

ஆணவம் என்றொரு பொருள் இல்லை என்றால், கடவுளுக்கும் உயிருக்கும் உள்ள தன்மையில் ( Qualitative propriety ) எந்தவித வேறுபாடும் இருக்க முடியாது. அது மட்டும் அன்று. ஆணவமலம் என்றொரு பொருள் இல்லா விட்டால், கடவுளின் இருப்புக்கே தேவை இல்லாமல் போய்விடும். ( But for the existence of Anava malam, there will be no need for the existence of God at all ) எனவே, ஆணவமலம் என்று ஒரு பொருள் உண்டு என் பதை ஏற்காதவர்கள் கடவுள் உண்மையை ஒருபோதும் காரண - காரிய இயைபு படுத்தி நிலைநாட்ட முடியாது.

எந்நேரமும் எக்காலத்திலும் நமக்கெல்லாம் நன் மையையே செய்து வரும் கடவுள், நமக்குத் தீமையைச் செய்யும் ஆணவ மலத்தை நிச்சயம் உண்டாக்கி இருக்க முடியாது. தனக்குத் தீங்கு செய்யும் ஆணவ மலத்தை உயிரும் உண்டாக்கி இருக்க முடியாது. எனவே ஆணவ மலமும் உயிரைப் போல என்றும் உள்ள பொருளே என்பது பெறப்படும். உயிர்களுக்குத் தொன்றுதொட்டு அறியாமை உள்ளமையால், ஆணவமலமும் அநாதியே உள்ளது என்பது தெளிவாகும். ஆணவமல உண்மையைச் சைவ சித்தாந்தம் இவ்வாறு நிலை நாட்டுகின்றது.

### ஆணவமலத்தின் இயல்பு

ஆணவமலம் இருள் போன்றது. புறஇருள் நம் கண்களுக்குத் தெரிகிறது. அக இருள் ஆகிய ஆணவமலம், நமது அறிவையே மறைப்பதால், அதன் இருப்பை நம்மால் அறிய முடியவில்லை.

ஆணவமலம் நமது அறிவு இச்சை செயல்களை வலுவாகப் பாதிக்கிறது என்பதை நாம் அறியாமல் இருக்கிறோம். ஆயினும், நமது எண்ணங்களும் சொற்களும் செயல்களும் தொழிற்படுவதை உள்நோக்காக நோக்கினால், அதன் பாதிப்பை நம்மால் அறிய முடியும்.

ஒருவர் நம்மைப் பொய்யாகப் புகழும் பொழுது, அஃது உண்மையன்று என்பதைத் தெரிந்திருந்தும், அப்புகழ்ச்சியை கேட்டு நம் மனம் மகிழ்கிறது.

தன்னால் அந்தச் செயல் நடைபெறவில்லை என்பதைத் தெளிவாக அறிந்திருந்தும், "நான் இல்லாவிட்டால் அது நடந்திருக்காது" என்று ஒருவர் தம்மைத் தாமே தற்புகழ்ச்சி செய்கிறார்.

நாம் செய்வது சமுகத்திற்குத் தீங்கு விளைவிப்பது என் பதைத் தெளிவாகத் தெரிந்திருந்தும், அந்தத் தவற்றையே மீண்டும் மீண்டும் செய்கிறோம்.

இவ்வாறு அறிந்தும் அறியாதவர்போல் நாம் நடந்து கொள்வதற்கு என்ன காரணம்? நமது அறிவை மயக்கும் ஆணவமலப் பற்று நமக்கு உள்ளமையாலேயே, நாம் இப்படியெல்லாம் உண்மைக்கு மாறாகவும் முன்னுக்குபின் முரணாகவும் நடந்து கொண்டிருக்கிறோம்.

"ஆணவமலப்பற்று" என்பது, நம்மை நாமே பிறரை விடக் கூடுதலாக மதித்துக் கொண்டிருப்பது ஆகும். இந்தக் குணம் பெரும்பாலும் அனைவரிடமும் உள்ளது. ஆயினும் வெளியில் நாம் மிகவும் எளியவர்போல், நம்மைக் காட்டிக் கொள்வோம்; உள்ளத்தில் ஒருவகை மறைப்பை நாமே ஏற்படுத்திக் கொண்டிருப்பதுதான், ஆணவமலப்பற்று ஆகும்.

உயிர்கள் பல ஆயினும் ஆணவமலம் ஒரு பொருளே ஆகும். உயிர் அதனை எந்த அளவு பற்றி நிற்கிறதோ, அந்த அளவு உயிரின் அறிவை அது பலவிதமாக மறைக் கிறது. இஃது எதுபோல என்றால், கண்நோய் உள்ள கண்ணில், நோயின் கடினத் தன்மைக்கு ஏற்ப (cataract), கண்ணின் ஒளியை அந்நோய் மறைப்பதைப் போன்ற தாகும்.

கண் நோய் உள்ள கண்ணுக்கு, அந்நோய் செயற்கை யாக இருப்பது போல, ஆணவமல மறைப்பு உயிர்க்குச் செயற்கையானதே ஆகும். ஆணவ மலம் அநாதியே உள்ளது ஆகலின், அஃது என்றும் அழிவதில்லை.

**ஆணவ மலத்தின் இருவகை இயல்புகள்:**

உயிர்கள் பிறவிக்கு வருவதற்கு முன்பு மாயா கருவிகளைப் பெற்றிருக்கவில்லை. அஃது உயிர்க்குக் கேவல நிலை எனப்படும். அந்நிலையில் உயிர் ஆணவ மலத்தை மட்டுமே பற்றி நிற்கும். அப்பொழுது உயிரின் அறிவையும் செயலையும் ஆணவமலம் முழுமையாக மறைத்து நிற்கும்.

ஆணவமலத்திற்கு இருவகை ஆற்றல்கள் உள்ளன. ஒன்று ''ஆவாகரசத்தி'' எனப்படும்; மற்றொன்று "அதோ நியாமிகா சத்தி'' என்று கூறப்படும். ''ஆவாகர'' என்றால், ''நிலையாக'' என்று பொருள். அஃதாவது அஃது ஆணவ மலத்தின் நிலையான ஆற்றல் (unalterable force) ஆகும். உயிர்கள் பிறவிக்கு உட்படுவதற்கு முன்னுள்ள கேவல நிலையில் ஆணவமலம், உயிரின் அறிவையும் செயலையும் முழுமையாக மறைத்து நிற்பது, ஆணவமலத்தின் சிறப்பு இயல்பு ஆகும். அதன் ஆவாகர சத்தியைக் கொண்டு, அதன் சிறப்பு இயல்பை அது நிகழ்த்துகிறது.

''அதோ நியாமிகை'' என்றால், கீழ் நோக்கிச் செலுத்துவது என்று பொருள். உயிர்கள் பிறவிக்கு வந்த பிறகு மாயா கருவிகளைப் பெற்றுள்ளன. அப்பொழுதும் உயிர்க்கு ஆணவமல மறைப்பு ஏற்படுகிறது. பிறவி நிலையில் ஆணவமலம் உயிரின் அறிவை மேல்நோக்கிச் செல்ல ஒட்டாமல், கீழ்நோக்கிச் செல்லுமாறு (driven to perversity) செய்கிறது. இஃது ஆணவ மலத்தின் பொது இயல்பு ஆகும். அதன் அதோ நியாமிகா சத்தியைக் கொண்டு, அதன் பொது இயல்பை அது நிகழ்த்துகிறது.

மாயை ஒளிப் பொருள். பிறவி நிலையில் மாயா கருவிகள் உயிரின் அறிவு இச்சை செயல்களை மேல்நோக்கிச் செலுத்தும். அப்போது, உயிர்க்குள்ள ஆணவமலப் பற்று காரணமாக, ஆணவமலம் அவற்றை மேல்நோக்கிச் செல்ல ஒட்டாமல் தடுத்து, உயிருக்கு விபரீத உணர்வுகளைத் தோற்றுவிக்கிறது. எனவே நமக்கு ஏற்படும் இடர்ப்பாடுகள் அனைத்திற்கும் காரணமாய் இருப்பது, நம்மிடம் உள்ள ஆணவமலப்பற்றே ஆகும். இறைப்பற்று ஒன்றினாலேயே, உயிர் ஆணவமலப்பற்று நீங்கப் பெறும்.

## ஆணவ மலத்தின் காரியங்கள்:-

இருள் ஒரே பொருளாய் இருந்துகொண்டு, பல கண்களோடு கூடி நின்று, கண்களின் காணும் திறனை மறைக்கிறது. அதுபோல ஆணவமலம் ஒரே பொருளாக இருந்துகொண்டு, பல உயிர்களின் அறிவு இச்சை செயல்களை மறைக்கிறது.

ஆணவமலம் உயிரின் அறிவு இச்சை செயல்களை எப்படி மறைக்கிறது என்பதை அதன் காரியப்பாடுகளை வைத்துப் புரிந்துகொள்ளலாம்.

மாயையின் காரியங்கள், தனு, கரண, புவன, போகங்கள் என்று கூறுகிறோம். அவ்வாறே ஆணவ மலத்தின் காரியங்கள், மோகம், மதம், இராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்னும் ஏழு ஆகும்.

அவற்றைப் பற்றிய விளக்கம் வருமாறு :-

### 1 மோகம் :-

குருவின் அறிவுரைகளாலும், நூல்கள் வாயிலாகவும் "உயிர்க்குத் தீங்கு விளைவிப்பன இவை" என அறிவுறுத்தப் பட்டுத் தெளிவாகத் தெரிந்த பிறகும், அத்தீமைகளை விட்டு நீங்காமல், மீண்டும் மீண்டும் அவற்றைச் செய்வதிலேயே விருப்பம் கொள்வதே, மோகம் எனப்படும்.

### 2 மதம் :-

தன்னைவிட உயர்ந்தவர் எவரும் இலர் ; தான்கொண்ட கொள்கையை விடச் சிறந்தது எதுவும் இல்லை என்று இவ்வாறு தற்பெருமை கொண்டு இருப்பதே மதம் எனப்படும்.

### 3 அராகம் :-

தனக்குக் கிடைக்காத பொருளினிடத்து அளவுக்கு மீறிய ஆசை வைத்துக்கொண்டு இருப்பதே அராகம் எனப்படும்.

### 4 கவலை :-

தனக்குக் கிடைத்த பொருள் தன்னை விட்டு நீங்கும் பொழுது, அது காலத்தின் கட்டாயம் என்று அமைதி அடையாமல் இருப்பதுவும், தனக்குக் கிடைக்க வேண்டியது

கிடைக்குமோ கிடைக்காதோ என்று கற்பனை செய்வதும் கவலை எனப்படும்.

**5 தாபம் :-**

உற்றார் உறவினர்களை விட்டுப் பிரிந்ததற்கும் பிரிவதற்கும் கொள்கின்ற பிரிவாற்றாமை, தாபம் எனப்படும்.

**6 வாட்டம் :-**

தாபத்தினால் ஏற்பட்ட ஆற்றாமை காரணமாக, முகமலர்ச்சி இன்றி வருந்துவது, வாட்டம் எனப்படும்.

**7 விசித்திரம் :-**

நமக்கு ஏற்படும் துன்பங்களுக்குக் காரணம், நாம் செய்த தீவினைகளே என்று எண்ணாமல், பிறரைக் குறை கூறிக் கொண்டு இருப்பது, ஒரு வேடிக்கையான துன்ப உணர்வு ஆகும். ஆகவே இது விசித்திரம் எனப்பட்டது.

இந்த ஏழு விதமான ஆணவமல காரியங்களைச் சிந்தித்துப் பார்த்தால், ஆணவமலப்பற்று எந்த அளவு நமது அறிவை மறைக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். இவை எல்லாம் நமக்கு செயற்கையாக நிகழ்வன. எனவே ஆணவமலச் சார்பு உயிர்க்குச் செயற்கை என்கிறோம். அஃது உயிர்க்குக் குணமன்று. ஆகவே, ஆணவமலப்பற்று உயிர்க்குக் " குற்றம் " ஆயிற்று.

**அநாதியே ஆணவமல மறைப்பு உயிர்க்கு ஏற்பட்டதற்குக் காரணம்.**

அறிவு, இச்சை, செயல் ஆகிய மூன்றும் உயிர்க்குள்ள உள்ளார்ந்த தன்மைகள் ( Inherent qualities ). இம் மூன்றனுள் உயிர் பிறவிக்கு உட்படுவதற்கு முன்பு, எளிமை காரணமாகத் தன் இச்சையைக் கொண்டு ஆணவமலத்தைப் பற்றியது. 'பற்று' என்னும் சொற்குப் பொருள், சார்ந்து நிற்றல் ( dependence ) என்பதாகும். உயிர் எப்பொழுதும் எதையாவது பற்றியே நிற்கும் இயல்புடையது ( Soul is not independent ). அஃதாவது அந்நிலையில் கடவுளையோ, மாயா கருவி களையோ சார்ந்து நிற்க இயலாமை காரணமாக, பற்றுதற்கு எளிதாக இருந்த ஆணவமலத்தைச் சார்ந்து நின்றது.

சார்ந்ததன் வண்ணமாம் தன்மை ஆதல்பற்றி, ஆணவ மலம் ஆகிய பாசத்தை இச்சித்ததால், உயிர் பசுத்தன்மை பசுத்துவம் உடையதாயிற்று.

அநாதியே உயிர்க்குச் செயற்கருவியோ, அறிகருவியோ கொடுக்கப்படவில்லை. எனவே, உயிரின் அறிவும் செயலும் கேவல நிலையில் தொழிற்படவில்லை. அந்நிலையில் உயிரின் இச்சை அறிவின் தொடர்பு இன்றி நின்றமையால், உயிர் ஆணவ மலத்தைச் சார்ந்து, அதன் மறைப்புக்கு உள்ளாகியது.

இது தேனை விரும்பி உண்ணச் செல்லும் பொழுது, ஈக்களின் கால்கள், அந்தத் தேனில் சிக்கி அதிலிருந்து மீள முடியாமல் தவிப்பதைப் போன்றதாகும்.

வீடுபேற்று நிலையில், கருவிகரணங்கள் நீங்கியமையால், உயிரின் இச்சை இறைவனைப் பற்றி இறைத்தன்மை பெறுவது போன்று, கருவிகரணங்களைப் பெறுவதற்கு முன்புள்ள கேவல நிலையில், உயிரின் இச்சை பாசம் ஆகிய ஆணவ மலத்தைப் பற்றிப் பசுத்துவத்தைப் பெற்று உயிர் 'பசு' என்னும் பெயரைப் பெற்றது. இவ்வுண்மையைத் தாயுமானவர்,

"ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம் சாருநாள் எந்நாளோ"

(45—14—28)

என்று அருளிச்செய்தார்.

ஆணவமலம் சடம். எனவே அஃது உயிரைத் தானே சென்று மறைப்பது இல்லை. உயிர் மிக மிக எளிமையானது. எனவே தனக்கு ஒரு மறைப்பைத் தானே செய்து கொள்ள உயிரினால் முடியாது. இறைவன் நின்மலன். எனவே உயிர்க்குத் தீங்குதரும் செயலை அவன் செய்யமாட்டான். இதனை இருபா இருபஃது என்னும் சாத்திரத்தில்,

"எம்மை வந்து அணையத் தானோ
மாட்டாது; யானோ செய்கிலன்;
நீயோ செய்யாய் நின்மலன் ஆயிட்டு"

என்று அருணந்திசிவம் அருளிச் செய்துள்ளார்.

இதிலிருந்து, அநாதியே உயிர்க்கு ஆணவ மல மறைப்பு ஏற்பட்டதற்குக் காரணம், எந்தவிதக் கருவிகரணங்களும் இல்லாத அந்நிலையில், உயிர் தன் இச்சையால் ஆணவ மலத்தைப் பற்றி நின்றதே ஆகும். இவ்வுண்மையைச் சிவஞான போதச் சிற்றுரை, நான்காம் சூத்திரம், இரண்டாம் அதிகரணத்தில்

'' அநாதியே மலத்தைப் பற்றுதல் உயிரின்
வினையாய், உயிர்க்குற்றங்களுள் வைத்து எண்ணப்படும் ''

என்று சிவஞான சுவாமிகள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

### அநாதியே உயிர் ஆணவ மலத்தைப் பற்றியதை இறைவன் தடுக்காததற்குக் காரணம்,

எளிமை காரணமாக உயிர் அநாதியே ஆணவ மலத்தைப் பற்றியதை, இறைவன் தடுத்திருந்தால், உயிர் வேறு எதையுமே பற்ற முடியாதபடி ஏங்கி விட்டிருக்கும். அந்த ஏக்கம் காரணமாக, பிறிது ஒன்றைப் பற்றும் விருப்பம் இன்றி, உயிர் வாளா கிடக்கும். அதன் விளைவாகப் பின்பு மாயா கருவிகளைப் படைத்து, இறைவன் உயிர்களுக்கு வழங்கினாலும், உயிர்கள் அவற்றைப் பற்ற மாட்டா. அதனால் படைப்பின் பயன் வீணாகிவிடும். இதனை ஓர் உவமை வாயிலாக உணரலாம்.

ஒரு குழந்தை விருப்பமாக வைத்திருந்த பொம்மையைப் பிடுங்கிவிட்டு, வேறொரு பொருளை, அந்தக் குழந்தையிடம் கொடுத்தால், அப்பொருளை அது வாங்க மறுத்துவிடும். அதுமட்டுமன்றி, முன்பு தான் வைத்திருந்த பொம்மையைத் தரும்படி கேட்டு அழும். அநாதியே ஆணவமலத்தை மட்டும் பற்றி நின்ற உயிரின் நிலை, இந்தக் குழந்தையின் நிலையைப் போன்றதே ஆகும். எனவேதான், அநாதியே உயிர் ஆணவ மலத்தைப் பற்றியதை இறைவன் தடுக்காமல் இருந்து விட்டான்.

## கன்மம்

### கன்ம மல உண்மை

கடவுள், உயிர், ஆணவம் ஆகியன போல, கன்மமும் ஒரு பொருளே என்று சைவசித்தாந்தம் கொள்கிறது. கன்மம் என்பது உயிரின் அறிவு, இச்சை, செயல்கள் தொழிற்படும் நிலையைக் குறிக்கும்.

உயிர் ஏதேனும் ஒரு பொருளைப் பற்றியே நிற்கும் தன்மை உடையது. உயிர் மிகவும் எளிய பயந்த சுபாவம் உடையது. எனவே, அநாதியே இறைவனைப் பற்ற முடியாத உயிர், பற்றுதற்கு எளிதாக இருந்த ஆணவமலத்தைப் பற்றியது. தன்னைப் பற்றி நிற்கும் உயிரின் அறிவு இச்சை செயல்களை மறைப்பது ஆணவ மலத்தின் இயல்பாகும்.

அநாதியே உயிர் தன் இச்சையால் ஆணவமலத்தைப் பற்றிய செயல் கன்மம் ஆகும். பிறவிக்கு வந்த பிறகும், ஆணவமலப்பற்றுக் கொண்டு செய்யும் செயல்களே கன்மம் எனப்படும். பிறவிக்கு வருவதற்கு முன்பு அநாதியே உள்ள உயிர், அநாதியே உள்ள ஆணவமலத்தை. அநாதியே பற்றிய செயலும் அநாதியே நிகழ்வதால், அச்செயல் ''மூலக் கன்மம்'' எனப்படுகிறது. எனவே கன்மமும் அநாதியே உள்ளது என்பது தெளிவாகும்.

பிறவிக்கு வந்த பிறகு உயிர்கள் செய்யும் எல்லா வினைகளுக்கும், மூலகன்மம் காரணமாக இருப்பதால், இது ''காரணகன்மம்'' என்றும் கூறப்படுகிறது. அநாதியே உயிர் ஆணவமலத்தைப் பற்றியதே, உயிர் செய்த முதல் பாவம் (தீவினை) ஆகும். அஃது அறியாமற் செய்த பாவமாகும்.

கன்மம், ஆணவமலச் சார்பினால் உயிர்க்குக் குற்றம் ஆதலினால், அது மலம் எனப்படுகிறது. இதிலிருந்து கன்மமும் அநாதியே உள்ளது என்பது பெறப்படும்.

## மூவகை காரிய கன்மங்கள்

கன்ம மலத்தின் காரியங்கள் மூவகைப்படும். அவை ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் எனப்படும். இவற்றைத் தமிழில் முறையே வருவினை, இருப்புவினை, நுகர்வினை அல்லது ஊழ்வினை என்பர்.

இறைவன் வழங்கிய உடலில் நின்று முதன்முதலில் நாமாக விரும்பிச் செய்யும் வினை ''ஆகாமியம்'' எனப்படும். இந்த ஆகாமியமே மறுபிறவிக்கு வித்தாக அமைகிறது. நாமாக வருவித்துக்கொள்ளும் வினை ஆகலின், அது ''வருவினை'' எனப்பட்டது.

ஒரு பிறவியில் செய்யும் ஆகாமிய வினைகளுக்குப் பயன், அந்தப் பிறவியிலேயே விளையாமல், மறு பிறவிக்குப் பயன்களாக வரும்பொருட்டுக் குவித்து வைக்கப் படும் வினைகள் "சஞ்சிதம்" எனப்படும். அந்த அந்த பிறவியில் செய்யும் ஆகாமிய வினைப்பயன்கள், அந்தந்தப் பிறவியிலேயே ஊட்டப்படுமாயின், உயிரின் முயற்சி தொழிற்படாமற் போய், மேலும் வினை ஆற்றுவதை உயிர் நிறுத்திவிடும். எனவே, உயிர்கள் திருந்தி உயர்தல் பொருட்டு பல்வேறு பிறப்பு வாய்ப்புக்களை இறைவன் வழங்குகிறான். அதனாலேயே ஒரு பிறவியில் செய்த ஆகாமிய வினைகள், மறுபிறவிக்குப் பயனாக வருதல் பொருட்டு, அவை சஞ்சிதம் ஆகக் குவித்து வைக்கப் படுகின்றன.

இந்த சஞ்சித வினைக் குவியலிலிருந்து, உயிர்கள் முன்னேறும் பொருட்டு, நுகர்தற்குறிய வினைப்பயன்கள் ஆகிய இன்பத்துன்பங்களை இறைவன் அடுத்தடுத்த பிறவி களில் உயிர்கட்கு ஊட்டுகிறான். இவ்வாறு ஊட்டப்படும் வினைப்பயன், "பிராரத்தம்" எனப்படும். இதுவே "ஊழ்" எனவும் "விதி" எனவும் பேசப்படுகிறது. ஊட்ட ஊழ்; விதிக்கப்படுவது விதி.

காரிய கன்மம், இவ்வாறு ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் மூவகைப்படும்.

## இருவினை இலக்கணம்

ஆகாமிய கன்மம், நல்வினை தீவினை என இரு வகைப்படும். நல்வினை புண்ணியம் எனவும், தீவினை பாவம் எனவும் கூறப்படும். நல்வினையும் கன்மம் என்று கூறப்படுவதற்குக் காரணம், ஆணவமலப்பற்றுக் கொண்டு "யான் - எனது" என்னும் செருக்கோடு செய்வதனாலேயே ஆகும்.

மனத்தினாலும் வாக்கினாலும் உடலாலும் பிற உயிர் களுக்கு நன்மை செய்வது, நல்வினை ஆகும்; அவ்வாறு செய்யாமல் தீமைசெய்வது, தீவினை ஆகும். இறைவன் தந்த உடலைக்கொண்டு செய்யும் பொழுது, நல்வினை தீவினை கள் தொடங்குகின்றன. நல்வினைப் பயன் ஆகிய இன்பத்தை

யும், தீவினைப் பயன் ஆகிய துன்பத்தையும் அனுபவிக்கும் பொழுது இருவினைகள் அழிகின்றன.

இன்பத் துன்பங்களை அனுபவிக்கும் பொழுது, இன் பத்தில் விருப்பும் துன்பத்தில் வெறுப்பும் ஏற்படும். இந்த விருப்பு வெறுப்புக்களின் அடிப்படையில், இன்பத்தை அனுபவிக்கத் துடிப்பும், துன்பத்தை அனுபவிக்க மடியும் ஏற்படும். இந்தத் துடிப்பும் மடியும் புதிய ஆகாமிய வினைகள் ஆகும். வினைப் பயன்கள் நாசம் அடையும்பொழுது புதிய வினைகள் உற்பத்தியாகின்றன. எனவே, இருவினை கள் நாசோற்பத்தி எனப்படும்.

சில மென்மையான ஆகாமிய வினைப் பயன்கள் சஞ்சிதத்திற்குச் செல்லாமல், அந்தந்தப் பிறவியிலேயே பயனுக்கு வருவதும் உண்டு. உயிர்களின் முயற்சி அவிந்து போய் விடாமல், உயிர்கள் மேலும் மேலும் முயற்சிசெய்து முன்னேறும் வகையில், மெல்லிய ஆகாமிய வினைப் பயன் கள், அந்தந்தப் பிறவியிலேயே இறைவனால் உயிர்களுக்கு ஊட்டப்படுகின்றன.

## முதல் பிறப்பு வந்த விதம்

பிறவிக்கு வருவதற்கு முன்பு உயிர்கள், ஆணவ மலத்தைப்பற்றி, தமது அறிவாற்றலையும் செயலாற்றலையும் இழந்து இருந்தன. அந்நிலை கண்டு இறைவன் இரக்கப்பட்டு அருவ நிலையில் உள்ள எல்லா உயிர்களுக்கும் ஒரே மாதிரியான நுண்ணுடம்பைத் தந்தான்.

நுண்ணுடல் என்பது மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் மூன்றும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன் மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டு நுண்ணுறுப்புக்களால் ஆகியது. இதனையே ஔவையார், "புரியட்ட காயம்" என்று விநாயகர் அகவலில் அருளிச் செய்துள்ளார்.

இந்த நுண்ணுடலைப் பெற்றதும் உயிர்களின் அறிவாற்றலும் செயலாற்றலும் இயங்கத் தொடங்குகின்றன. அதன் பயனாக உயிர்களின் விருப்பு வெளிப்படுகிறது. அதற்கு முன்பு உயிர்களின் விருப்பாற்றல், ஆணவ மலத்தைப் பற்றி வெளிப்படாமல் இருந்தது.

அந்த விருப்பாற்றலைக் கொண்டு உயிர்கள் முதன் முதலில் தம் விருப்பத்தை வெளிப்படுத்துகின்றன. அந்த விருப்பத்தின் அடிப்படையில் உயிர்களுக்கு வெவ்வேறான பருவுடலை இறைவன் வழங்குகிறான். எனவே எல்லா உயிர்களுக்கும் நுண்ணுடல் ஒரே தன்மையதாகவும் பருவுடல் வெவ்வேறு தன்மையதாகவும் அமைந்துள்ளன என்பது பெறப்படும். பருவுடல் வெவ்வேறானது என்றமையால், பிறவி என்று ஒன்று தொடங்கும்பொழுது, எல்லாவிதமான உயிரினங்களும் தோன்றி விடுகின்றன என்பது தெளிவாகும். இவ்வுண்மையை,

'' பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண் - முற்பால்
தனு கரணமும் புவனமும் தந்து. அவற்றால்
மனம் முதலால் வந்த விகாரத்தால் - வினைஇரண்டும்
காட்டி அதனால் பிறப்பு ஆக்கிக் கைக்கொண்டும்
மீட்டறிவு காட்டும் வினை போற்றி.'' (11 - 13)

என்று போற்றிப் பஃறொடை பேசுகின்றது.

எல்லா உயிர்களுக்கும் இறைவன் ஒரே தன்மையுடைய நுண்ணுடலை வழங்கினான் என்பதைத் திருவள்ளுவர்,

''பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்''

என்று அருளிச்செய்தார். உயிர்களுக்கு முதற் பிறப்பு இவ்வாறு ஏற்பட்டது.

## மறுபிறப்பு உண்மை

மறுபிறப்பு என்பது, நாள்தோறும் நாம் உறங்கி விழிப்பதைப் போன்றதாகும். இந்த உண்மையைத் தெளிவு படுத்தியே திருவள்ளுவர்,

'' உறங்குவது போலும் சாக்காடு ; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு '' (339)

என்று அருளிச் செய்தார். ''பிறப்பு'' என்னும் சொல் இங்கு மறுபிறப்பைக் குறிக்கும்.

ஒவ்வொரு நாளும். உடலில் உள்ள களைப்பு நீங்கும் பொருட்டு. நாம் உறங்குகிறோம். அதன் பயனாக மறுநாள்

விழிக்கும் பொழுது, புத்துணர்வோடு எழுந்திருக்கிறோம். ஒவ்வொரு பிறப்பிலும் செய்யும் வினைகளால் ஏற்பட்ட களைப்பிலிருந்து உயிர்கள் இளைப்பாறும் பொருட்டே, இறைவன் உயிர்களுக்கு இறப்புக்களை ஏற்படுத்துகிறான்.

பிறக்கும்பொழுது நாம் புத்துணர்வோடு பிறக்கிறோம். மறுபிறப்பில் புதிய உணர்வுகளைப் பெற்று, மேலும் நாம் முன்னேற வேண்டும் என்பதற்காகவே, இறைவன் மறுபிறப்புக்களை ஏற்படுத்தியுள்ளான். ஆகவே, ஒவ்வொரு பிறப்பும் நாம் திருந்தி முன்னேறுவதற்கான வாய்ப்பு என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

ஒரே பிறவியில் இறைவனின் அருளிப்பாடுகளை நம்மால் புரிந்து கொள்ள முடியாது. அவ்வளவு அறிவு விளக்கம் ஒரே பிறவியில் நமக்கு ஏற்பட்டு விடாது. எனவே தான் பல்வேறு பிறவி வாய்ப்புக்களை இறைவன் உயிர்களுக்கு வழங்கியுள்ளான்.

ஒரே ஒரு பிறப்பில் நாம் செய்யும் நல்வினைக்குப் பயனாக சுவர்க்கத்தையும், தீவினைக்குப் பயனாக நரகத்தையும் இறைவன் வழங்குவான் என்று சில மதங்களில் கூறுவது பொருத்தமற்றதாகும். நரகத்திற்கு அனுப்பப்படும் உயிரை, அங்கிருந்து மீளவிடாமல், அங்கேயே தவிக்க விடுவது (Left helpless) இறைவனின் பெருங்கருணைக்கு இழுக்காகும்.

எனவே, மறுபிறப்பு உண்டு என்பதை ஏற்பதே, உயிர்களின் முன்னேற்றத்திற்கும் இறைவனின் பேருருளுக்கும் பொருந்துவதாக உள்ளது என்பது கருத்தில் கொள்ளத்தக்கது.

## இறைவனே உயிர்களுக்கு வினைப்பயனை ஊட்டுகிறான்.

வினை சடம்; வினைப்பயனும் சடம். சடப்பொருள்கள் தாமே இயங்கும் திறனற்றவை. எனவே, உயிர்களுக்கு வினைப் பயனை இறைவனே ஊட்டுகிறான் என்று சைவ சித்தாந்தம் கொள்கிறது. இவ்வுண்மையைத் திருவள்ளுவர்,

"வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது" — 377

என்றருளிச் செய்துள்ளார்.

இந்தக் குறட்பாவில் வரும் "வகுத்தான்" என்ற சொற்குப் பரிமேலழகர்,

"ஓர் உயிர் செய்த வினையின் பயன், பிறிதோர் உயிரின்கண் செல்லாமல், அவ்வுயிர்க்கே வகுத்தலின், 'வகுத்தான்' என்றார்"

என்று பொருள் கூறி இருப்பது சிந்திப்பதற்குரியது. இஃது இறைவனே உயிர்களுக்கு வினைப்பயனை ஊட்டுகிறான் என்பதற்குச் சிறந்த பிரமாணமாக விளங்குகிறது

இதிலிருந்து ஒரு தந்தை செய்த வினைப்பயன் மகனுக்கோ, கணவன் செய்தது மனைவிக்கோ ஒருவர் செய்தது பிறருக்கோ வராது என்பது இனிதே பெறப்படும்.

உலகியலில் "என் முன்னோர் செய்த தவப்பயன்" என்று கூறுவதெல்லாம், உபசார வழக்கே அன்றி பிறிதில்லை என்பதை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

வினைப்பயன் உயிர்க்கு ஊட்டப்படும் பொழுது, செய்யப்பட்ட வினைகள் வரிசையாகப் பயனுக்கு வருவதில்லை. எத்தகைய வினைப்பயனை ஊட்டினால், உயிர் பக்குவப்படுமோ, அதனைக் கருத்தில் கொண்டு, முன் செய்த வினைக்குரிய பயன் பின்னும், பின் செய்த வினைக்குரிய பயன் முன்னும் ஆக, மாறி மாறிப் பயனுக்கு வருமாறு பயன்கள் ஊட்டப்படுகின்றன.

ஊட்டப்படும் ஒரு சில வினைப்பயன்களில், உயிர்கள் திருத்தமுற்றுப் பக்குவப்பட்டு விட்டால், ஊட்டப் படாமல இருக்கும் எஞ்சிய சஞ்சிதக் குவியலை, இறைவன் காரியப் படுத்தாமல் சுட்டு எரித்து விடுவான்.

எனவே, நாம் செய்த எல்லா வினைகளுமே, பயன்களாக நமக்கு வரும் என்பதில்லை. நமது தவறுகளுக்காக வருந்தித் திருந்திய வாழ்க்கையை, நாம் வாழத் தலைப்பட்டு விடுவோமாயின், வினைப் பயன் ஆகிய ஊழ் ஊட்டப் படுவது நிறுத்தப்பட்டுவிடும்.

## விதியை அனுபவித்துத்தான் தொலைக்க வேண்டுமா ?

"விதியையாவது வெல்வதாவது? இஃதெல்லாம் வெட்டிப் பேச்சு. செய்த வினைக்கு உரிய பயனை அனுபவித்தே தீர்க்க வேண்டும். விதி யாரை விட்டது?" என்று பெரும்பாலோர் கூறிக்கொண்டிருக்கிறார்கள்.

"விதி" எனப்படும் வினைப் பயன்கள் இறைவனாலேயே உயிர்களுக்கு ஊட்டப்படுவதால், அஃதும் உயிர் தவறுகளுக்காக வருந்தித் திருந்த வேண்டும் என்னும் நோக்கத்திலேயே ஊட்டப்படுகிறது.

வருத்தம் இரு வகைப்படும். ஒன்று தண்டனையைத் தாங்கமுடியாமல் வருந்துவது; மற்றொன்று தவறுகளுக்காக வருந்துவது. இவற்றுள் தண்டனைக்காக வருந்தும் உயிர்களின் ஊழ் நீக்கப்படுவதில்லை; தவறுகளுக்காக வருந்தித் திருந்தும் உயிர்களின் ஊழ் நிறுத்தப்படுகிறது.

எனவே வருந்தித் திருந்திய உயிரும் விதியை அனுபவித்தே ஆக வேண்டும் என்று கூறுவது இறைவனது அளப்பரும் பெருங்கருணைத் திறத்தில் உள்ள பேருண்மையைப் புரிந்து கொள்ளாமல் பேசுவதாகும்.

நடை முறையில் உள்ள ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு. இக்கருத்தில் தெளிவு பெறலாம் எனக் கருதுகிறேன். அந்த நிகழ்ச்சி வருமாறு:-

பதினான்கு ஆண்டுகள் ஆயுள் தண்டனை அனுபவிக்க வேண்டும் என்பது கைதி ஒருவனுக்கு, நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது. அவன் தனக்குரிய தண்டனையை அனுபவித்து வரும் காலத்தில், தன் தவறுகளுக்காக வருந்தித் திருந்திய வாழ்வு நடத்தி வருவானாயினான். தண்டனைத் தவிர்ப்பு விதிப்படி ( under the Remission provisions ) அவனுக்கு விதிக்கப்பட்ட பதினான்கு ஆண்டுகள் விதி நீக்கப்பட்டு. ஏழு ஆண்டுகளில் அவன் விடுதலை செய்யப்பட்டான். இன்றும் இந்த நடைமுறையைக் கண்கூடாகக் காண்கிறோம்.

மனிதாபிமான அடிப்படையில். மனிதனால் செய்யப்பட்ட சட்டமே இவ்வளவு கருணை உடையதாக இருக்கும் பொழுது, கருணையே வடிவாகிய கடவுளின் சட்டம்,

எவ்வளவு இரக்கம் உள்ளதாக இருக்கும் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

உண்மையிலேயே நாம் திருத்தம் உறும் நாள் வரை, நமக்கு ஏற்பட்ட விதியை அனுபவித்தே ஆக வேண்டும். அதில் இரண்டாவது கருத்துக்கு இடமே இல்லை. திருந்த வேண்டும் என்னும் எண்ணம் தோன்றிய வினாடி முதல், இறைவன் நமக்கு ஊட்ட இருக்கும் ஊழின் வலுவைச் சிறிது சிறிதாகக் குறைத்து, முழுமையாகத் திருத்தமுற்றதும், ஊழை ஊட்டுவதை அறவே நீக்கிவிடுவான்.

திருவள்ளுவர் "ஊழ் வலு மிக்கது" என்று கூறியிருக் கிறாரே அன்றி, ஊழை வெல்ல முடியாது என்று எந்த இடத்திலும் கூறவில்லை என்பதை இந்த இடத்தில் நினைவு கூர்தல் வேண்டும்.

எனவே வினைப்பயன் ஆகிய விதியை வாழ்நாள் முழு வதும் அனுபவித்தே ஆகவேண்டும் என்று கூறினால், வினைப்பயனை ஊட்டுபவன் அருளே வடிவாகிய இறைவன் என்னும் கொள்கை அடிபட்டுப் போகும். இவ்வுண்மையைச் சமயவாதிகள் நினைவில் கொள்வது நல்லது.

## திருத்தம் உறுவதற்கும் ஊழ் வேண்டுமா ?

"ஊழ்" என்பது இந்தப் பிறவியில் ஒருவனுக்கு ஏற் பட்ட சூழ்நிலையைக் குறிக்கும். "திருத்தம்" என்பது, அந்தச் சூழ்நிலையில் இருந்துகொண்டே, அதனைப் பொருட் படுத்தாமல், பலகால் முயன்று முயன்று முன்னேறுவதைக் குறிக்கும். எனவே ஊழ் வேறு; முயற்சி வேறு.

விதியை நினைத்துக் கொண்டே, எந்தவித முயற்சியும் செய்யாமல் இருப்பதைப் பெரியவர்கள் குற்றமாகக் கருது வார்கள், விதி என்பது முற்பிறவியில் செய்த வினையின் பயன்; முயற்சி என்பது இப்பிறவியில் நம் முன்புள்ள வினை – கடமை, எனவே கடமையைச் செய்யாமல், விதியைக் காரணம் காட்டிச் சோம்பேறியாக இருப்பதை உலகம் ஏற்பதில்லை. இவ்வுண்மையைத் தெளிவு படுத்தித் திருவள்ளுவர்,

"பொறி இன்மை யார்க்கும் பழி அன்று ; அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி" - 618

என்றருளிச் செய்தார். இதிலிருந்து திருந்த முயற்சி செய்வதற்கு ஊழ் காரணமாகாது என்பது புலப்படும்.

இன்னும் சிலர், "நமக்கு நல்ல விதி இருக்குமானால் தான் முயற்சி உண்டாகும் ; கெட்டவிதி இருப்பதனால்தான் சோம்பல் உண்டாகிறது" என்று கூறி, அதற்கு ஆதாரமாக

"ஆகூழால் தோன்றும் அசைவு இன்மை ; கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி" - 371

என்னும் குறட்பாவையும் மேற்கோள் காட்டுகிறார்கள்.

இந்தக் குறட்பாவிற்குச் சரியான பொருளைப் புரிந்து கொண்டால், இவ்வாறு ஊழையும் முயற்சியையும் ஒன்றாய்ப் போட்டுக் குழப்ப வராது. "அசைவு" என்ற சொல்லுக்கு, "மடி" என்று பரிமேலழகர் உரை கூறுகிறார். அவ்வாறாயின் "அசைவு இன்மை" என்னும் சொற்கு "மடி இன்மை" என்பது பொருளாகும். இப்பொருளைக் கருத்தில் கொண்டு, இந்தக் குறட்பாவிற்குப் பொருள் காண்போமாயின் முயற்சி செய்வதற்கு ஊழ் தேவை இல்லை என்பது புலப்படும். எனவே இந்தக் குறட்பாவை,

"அசைவின்மையால் தோன்றும் ஆகூழ்; மடியினால் தோன்றும் போகூழ்" என்று கொண்டுகூட்டி, "சோம்பல் இல்லாமல் முயற்சி செய்தால் நமக்கு நல்லவிதி ஏற்படும்; நமது சோம்பேறித் தனத்தினாலேயே நமக்குக் கெட்டவிதி உண்டாகிறது" என்று பொருள் கொள்ளவேண்டும்.

"அறிவறிந்து ஆள்வினை இன்மை பழி" என்று திருவள்ளுவர் கூறி இருப்பதால், இந்தக் குறட்பாவிற்கு இப்படிப் பொருள் கூறுவதே பொருத்தமாகும்.

அதனால்தான் இறைவன் சஞ்சிதத்தில் உள்ள வினைப் பயன் முழுவதையும் கொண்டு வந்து ஊட்டாமல், உயிர்கள் திருந்தக்கூடிய அளவுக்கு வினைப்பயனை ஊட்டுவதற்குக் காரணம், நமது முயற்சி அவிந்துவிடக் கூடாது என்பதற்காகவே என்று சைவசித்தாந்தம் கொள்கிறது.

எனவே திருத்தம் உறுவதற்கும் ஊழ் வேண்டும் என்று கூறுவது பொருத்தமற்றது என்பது தெள்ளிதின் புலப்படும்.

## ஊழை வெல்வதற்கான நேர்மையான வழி.

விதி வழியே மதி செல்லும். எனவே மதியால் விதியை வெல்ல முடியாது. விதியைவெல்வதற்குரிய வழியைத் திருவள்ளுவர், "அறிவறிந்து ஆள்வினை" செய்க என்று கூறுகிறார். இந்தத் தொடருக்குப் பொருள், அறிய வேண்டுவனவற்றை அறிந்து என்பதாகும். அதற்காக அறிய வேண்டுவன யாவை? அவை வருமாறு :-

1 வினைப் பயன் ஆகிய ஊழினை நமக்கு இறைவனே ஊட்டுகின்றான்.

2 அவனருளைப் பெற்றே விதியை வெல்ல முடியும்.

3 அவனருளைப் பெறுவதற்கு அருளாளர்களின் அருள் வாக்குகளே நமக்குத் துணை செய்கின்றன. இவை எல்லா மதத்தவர்களுக்கும் பொருந்தும்.

எனவே சைவர்கள் ஆகிய நாம், பன்னிரு திருமுறைகளில் உள்ள பதிகங்களை முறையாக நாள்தோறும் படனம் செய்து வருவோமாயின், விதியை வெல்லும் திறனை நாம் பெறுவோம். திருமுறைகளில் உள்ள திருவாக்குகள், சிவ பெருமானால் அருளப் பெற்றவை. எனவே, திருமுறைகளில் உள்ள சொற்கள், மந்திர ஆற்றலை உடையன. அவற்றை அன்றாடம் படனம் செய்து வருவோமாயின், அவை நமக்குத் திருத்தத்தை விளைவிக்கும்.

சிவபெருமானின் பெருமைகளையும், நமது சிறுமைகளையும், திருமுறைகள் பேசுவதால், அவை நமது செருக்கைச் சிறுகச் சிறுக நீக்கும் வல்லமை படைத்தவை. எனவே திருமுறைப் படனம் நமக்குற்ற ஊழ்வினையிலிருந்து விடுபடுவதற்குப் பெரிதும் உதவுகின்றது. ஊழை வெல்வதற்கு இதுவே நேர்மையான வழியாகும்.

சைவ சித்தாந்தத்தின் வினைக் கொள்கையினை இவ்வாறு புரிந்து கொள்ள வேண்டும்.

## மாயை

### மாயை உண்மை

இறைவன் எதையுமே உண்டாக்கவில்லை. ஆயினும் உயிர்கள் அறிவு விளக்கம் பெறும் பொருட்டு இந்த உலகத்தையும், உயிர்களுக்குள்ள உடல்களையும், உயிர்கள் அனுபவித்து மகிழ்தற்கு உரிய பொருள்களையும் இறைவன் படைக்கிறான்.

உண்டாக்குதல் வேறு; படைத்தல் வேறு. இல்லாத ஒன்றை உளதாக ஆக்குதல் ' உண்டாக்குதல் '' ஆகும். இருப்பதைப் பயன்படும்படிச் செய்தல் '' படைத்தல் '' ஆகும். இறைவன் மாயை என்னும் சடப்பொருளிலிருந்து, மேற்சொன்ன உலகு, உடல் முதலானவற்றை உயிர்களுக்குப் படைத்துக் கொடுக்கிறான்.

மாயை சடம்; அறிவற்றது. இறைவன் பேரறிவுடையவன். அறிவுடைப் பொருளிலிருந்து அறிவற்ற சடப்பொருள் தோன்றுவது இல்லை என்பது கண்கூடு. மாயை கடவுளிடமிருந்து தோன்றியது என்று கூறினால், கடவுளும் சடப்பொருள் என்று கூறும்படி ஆகிவிடும். எனவே, '' மாயை '' யும் கடவுளால் உண்டாக்கப் படாத அநாதியே உள்ள பொருள் என்பது பெறப்படும். '' மாயா '' என்ற சொல்லின் திரிபே '' மாயை '' ஆயிற்று மா + ஆ = மாயா. மா — மாய்வது அல்லது ஒடுங்குவது. ஆ — ஆவது அல்லது தோன்றுவது. ஒடுங்குவதும் தோன்றுவதும் ஆகிய தன்மை உடையதாக மாயா (மாயை) இருப்பதால், அஃது அப்பெயர் பெற்றது.

இந்த உலகத்தில் நாம் அனுபவிக்கும் அனைத்துப் பொருள்களும், அறிவற்ற சடப்பொருள்களே ஆகும். இவற்றைக் குறித்து விஞ்ஞான உலகம் ஆய்வு செய்துள்ளது. ' உலகில் உள்ள எல்லாச் சடப் பொருள்களையும் பகுத்துக் கொண்டே சென்றால், அவை அனைத்தும் பல நுண் பொருள்களாக மாறி முடிவில் ஒரு பேராற்றலாக உள்ளன '' என்று விஞ்ஞான உலகம் நிறுவியுள்ளது. அப்பேராற்றலையே சைவ சித்தாந்தம் '' மாயை '' என்னும் பெயரிட்டு அழைக்கிறது.

‘‘இன்மையிலிருந்து எதுவும் தோன்றாது’’ என்பது மற்றொரு விஞ்ஞான முடிவு ஆகும். உலகுக்கு ஒளியைத் தந்து கொண்டிருக்கும் சூரியன்கூட, அழிவை நோக்கிப் போய்க்கொண்டு இருக்கிறது என்று விஞ்ஞான உலகம் கூறுகிறது. எனவே அனைத்து சடப் பொருள்களும் அழிந்து, அவற்றிற்கு எல்லாம் மூலமாய் அழியாத நித்தியமாய் உள்ள ஒரு பொருள் இருக்கும் என்பது விஞ்ஞான உண்மை.

‘‘இல்லது தோன்றாது; உள்ளதே சிறக்கும்’’ என்பது சைவ சித்தாந்தத்தின் தலையாய கொள்கை ஆகிய ‘‘சற்காரிய வாதம்’’ ஆகும். சத் - உள்ளது; காரியம் - தோன்றும்; அஃதாவது உள்ளதே தோன்றும் என்பது இதற்குப் பொருள். ‘‘மாயை’’ என்னும் உள்பொருளிலிருந்தே இறைவன் இவ்வுலகத்தைத் தோற்றுவித்தான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. எனவே ‘‘மாயை’’யும் என்றும் உள்ள ஓர் உள்பொருள் என்பது தெளிவாகும்.

## மாயையின் இயல்பு

மாயையிலிருந்து அநாதியே இறைவன் இவ்வுலகத்தைத் தோற்றுவித்துப், பேருழிக்காலத்தில் மாயையிலேயே ஒடுக்கு கிறான். மாயைக்கும் இருவகை இயல்புகள் உள்ளன.

மாயா காரியங்கள் ஆகிய தனு, கரண, புவன, போகங்கள் அனைத்தும் உயிருக்கு அறிவு விளக்கம் செய்வனவே ஆகும். ஆகவே மாயை தன் அளவில் ‘‘ஒளிப்பொருள்’’ என்பது சைவ சித்தாந்தம் கொள்கிறது. இதனைச் சிவஞான போதம்,

‘‘மாயா தனு விளக்கு’’

என்று முழக்குகின்றது. ஆகவே ஒளிப்பொருளாய் நிற்பது மாயையின் சிறப்பு இயல்பு ஆகும்.

ஆணவம், கன்மம் என்னும் இரண்டு சடப்பொருள் களோடு சேர்ந்து, மாயை தொழிற்படும் பொழுதுதான், அஃது உயிரை மயக்கத்திற் குள்ளாக்கும் மலம் ஆகிறது. ஆகவே, மலகன்மங்களோடு விரவி நின்று, உயிர்க்கு ஒரு மலமாய் நிற்றல், மாயையின் பொது இயல்பு ஆகும்.

## மாயையின் முக்கூறுகள்

உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூன்று வகையாக உள்ளன. இவ்வாறு உயிர்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்படுவதற்குக் காரணம் அந்தந்த வகையில் உள்ள உயிர்களுக்குள்ள ஆணவமலப் பற்றின் மென்மை வன்மை களைக் குறித்தே ஆகும். ஆணவமலப்பற்று மிகவும் மென் மையாக உடைய ஆன்மாக்கள் விஞ்ஞானகலர் எனப்படுவர். அது மென்மையாக உடைய ஆன்மாக்கள் பிரளயாகலர் எனப்படுவர். வன்மையாக உடைய உயிர்கள் சகலர் என்று கூறப்படுவர்.

இந்த முக்கூற்று உயிர்களும் செயலாற்றும் தன்மை வேறு படுகிறது. எனவே அவரவர்களுக்குத் தனித்தனி உலகம் தேவைப்படுகிறது. ஆகவே மாயையும் சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என மூன்று வகையாகப் பகுக்கப் பட்டுள்ளது.

அவை வருமாறு :-

1 சுத்தமாயை சிவதத்துவம் எனப்படுகிறது. இறைவன் தன் அருளாற்றலை, மாயையின் ஒரு பகுதியில் மிகவும் முனைத்து இருக்கும்படி செய்கிறான். அப்பொழுது தோன்றும் உலகம் சுத்தமாயா புவனம் ஆகும்.

2 அசுத்தமாயை வித்தியாதத்துவம் எனப்படும். இறை வன் தன் அருளாற்றலைச், சற்றுக் குறைவாக முனைக்கும் படி செய்யும் நிலையில் தோன்றும் உலகம் அசுத்தமாயா புவனம் என்று கூறப்படுகிறது.

3 பிரகிருதிமாயை ஆன்மதத்துவம் எனப்படும். இறைவன் தன் அருளாற்றலை. மிகவும் குறைவாக முனைக்கும்படி செய்யும் பொழுது தோன்றுகின்ற உலகம், பிரகிருதிமாயா புவனம் என்று பேசப்படுறது.

இறைவன் தன் அருளாற்றலை இவ்வாறு மூன்று வித மாக முனைக்கும்படி செய்வதற்குக் காரணம், இறைவனின் முழுமையான அருளாற்றலைத் தாங்கும் திறன், ஆணவமல மறைப்புக் காரணமாக. உயிர்க்கு உயிர் வேறுபட்டு இருப்பதே ஆகும். ஒவ்வோர் உயிருக்கும் அதனதன் வாங்கும் திறனுக்கு

ஏற்ப இறைவன் அறிவை வழங்குகிறான், அதன தன் தாங்கும் திறனுக்கு ஏற்ப இன்பத்துன்பங்களை நுகரும்படி செய்கிறான். இதற்கு ஓர் உவமை வருமாறு :-

கண்ணில் அறுவை சிகிச்சை முடிந்தவுடன், ஒளியைத் தாங்கிக் கொள்ளத்தக்க அளவு கண்ணைப் பழக்கும் பொருட்டு, அந்தக் கண்ணில் கருப்புத்திரை போட்டு வைப் பதைப் பார்த்திருக்கிறோம். பையப் பைய மிகுந்த ஒளியில் கண்ணை ஈடுபடும்படி செய்யும் பொருட்டே இத்திரை போடப்படுகிறது. இறைவனும் இவ்வாறே நமக்கு அறிவையும் அனுபவத்தையும் வழங்குகிறான்.

## இரு வேறு உலகங்கள்

மாயையை உலகமாகக் காரியப் படுத்தும்பொழுது, சொல் உலகம், பொருள் உலகம் என இருவேறு உலகங்களாக நிற்கும்படி இறைவன் செய்கிறான் சொல் உலகம் மந்திரம், பதம், வன்னம் என்னும் மூன்று பகுதிகளாகவும், பொருள் உலகம், புவனம், தத்துவம், கலை என்னும் மூன்று பகுதி களாகவும் உள்ளன. இந்த ஆறும் உயிர்களுக்கு முத்தியை நோக்கி முன்னேறும் படிகள் ஆகும். இதனை " அத்துவாக்கள்" என்று கூறுவர். அத்துவா என்றால், " படி " அல்லது " வழி " என்று பொருள்.

இந்த அத்துவாக்கள் ஆறனுள், பொருள் உலகத்தில் இடம்பெறும் தத்துவம் முப்பத்தாறு ஆகும். அது பற்றிய விளக்கத்தை இந்நூலில் உள்ள தனிக் கட்டுரையில் காண லாம். பிறவற்றைக் குறித்து இங்குச் சிந்திப்போம்.

## சொல் உலகம்

பொதுவாகச் சொல் என்பது. நமது காதுகளினால் கேட்கப்படும் ஓசையைக் குறிக்கும். அதுமட்டுமன்று. அந்த ஓசையின் வழியே எழுந்து வந்து நமக்குப் பொருள் உணர்வை ஏற்படுத்துகின்ற ஆற்றலே சொல் ஆகும்.

சொற்கள் சொல்லப்பட்டதும் அழிந்து விடும். அவற்றில் உள்ள " பொருள் உணர்த்தும் ஆற்றல் " நம்மிடம் ஒருவகைப் பதிவை (Recording) ஏற்படுத்தும். இதனையே திருவள்ளுவர். " நாவினால் சுட்ட வடு " 129 என்கிறார்.

ஒருவர் நம்மைக் கடுமையான சொற்களால் கடிகிறார். அவ்வாறு அவர் கடிந்த சொற்கள் நாளடைவில் நமக்கு மறந்து போய்விடும். ஆயினும் அந்தச் சொற்களால் நமக்கு ஏற்பட்ட "பொருள் உணர்வு" என்றும் நம் உள்ளத்தில் பதிந்திருக்கும். இதனையே வள்ளுவர், "வடு" என்கிறார். இவ்வுண்மையைக் கருத்தில் கொண்டு, "சொல் உலகம்" பற்றிப் புரிந்து கொள்வது நல்லது.

சொல் உலகில் நான்கு வகையான வாக்குகள் உள்ளன. அவை வருமாறு ;

சூக்குமை வாக்கு - சிவ தத்துவம் எனப்படும் நாத தத்துவத்தில், சுத்தமாயையின் விருத்தியாய்த் தோன்றுவது. இந்த வாக்குக்கு வடிவம் கிடையாது. இஃது "ஒலி" அளவிலேயே நிற்கும்.

பைசந்தி வாக்கு - சத்தி தத்துவம் எனப்படும் விந்து தத்துவத்தில், பொதுவாக விளங்கியும், சிறப்பாக விளங்காமலும் "சொல்" வடிவில் நிற்கும். பைசந்தி என்றால், ஓரளவு விளங்குவது என்று பொருள். மயில் முட்டையில் உள்ள நீரை இதற்கு உவமையாகக் கூறுவதுண்டு. அந்நீரில் உள்ள ஐந்து நிறங்களும் இன்னவை என விளங்காமல் இருக்கும்; ஆயினும் அவற்றிற்கு நிறம் உண்டு.

சூக்குமை வாக்கிலும் பைசந்தி வாக்கிலும் மொழி வேற்றுமை கிடையாது. "ஓம்" என்னும் பிரணவத்திற்கும் மொழி வேறுபாடு இல்லை என்பது இங்குச் சிந்திக்கத் தக்கது.

மத்திமைவாக்கு - சதாசிவ தத்துவம் எனப்படும் சாதாக்கியத்தில் உள்ளது. இதில் சொற்கள் விளங்கித் தோன்றும். இந்த வாக்கிலிருந்துதான் மொழி தோன்றுகிறது. அந்தந்த சமயத்திற்குரிய வேதாகமங்கள், வெவ்வேறு மொழிகளில் இந்த வாக்கில் இருந்தே தோன்றியுள்ளன. எனவே, இதில் மொழி வேறுபாடு காணப்படுகிறது என்பது பெறப்படும். (எனவேதான் மூல மொழி ஆகிய தமிழ் மொழி பேசுபவர்களுக்கு, வடமொழியில் தோன்றிய ரிக் முதலான வேதங்கள் பிரமாணமாகா என்கிறோம்.)

வைகரி வாக்கு

இஃது ஈசுவரதத்துவத்தில் சூக்குமை வைகரி எனப் பெயர் பெறுகிறது; சுத்தவித்தை தத்துவத்தில் தூலவைகரி என்னும் பெயரை உடையதாக இருக்கிறது. வாக்கு வெளிப் பட்டு நிற்பதால் வைகரி வாக்கு எனப்படுகிறது. தன் செவிக்கு மட்டும் கேட்கும்படி வெளிப்படும் வாக்கு சூக்கும வைகரி எனப்படும். பிறர் செவிக்கும் கேட்கும்படி வெளிப் படும் வாக்கு தூலவைகரி என்று பேசப்படும்.

சுத்தமாயையில் தோன்றும் இந்த வாக்குகளை அடிப் படையாகக் கொண்டே, மந்திரங்கள். வேதங்கள், ஆக மங்கள் முதலியன தோன்றியுள்ளன. பிற புராணங்கள் எல்லாம், இவற்றிலிருந்து ஏற்பட்டனவே ஆகும்.

சொல் உலகில் உள்ள ''மந்திரம்'' என்பது, எழுத்துக் களை உடைய சொல்லைக் குறிக்கும், எடுத்துக்காட்டாக ''சிவாயநம'' என்னும் மந்திரச் சொல், எழுத்து வடிவில் இருப்பதைக் குறிப்பிடலாம்.

''பதம்'' என்பது எழுத்துக்களை உடைய சொற்களின் பொருளைக் குறிக்கும். எடுத்துக்காட்டாக, ''சிவாயநம'' என்னும் மந்திரச் சொல்லில், சிவன், அருள், உயிர், மறைப்- -பாற்றல், ஆணவமலம் என்னும் சொற்கள் பொருள்களை உடையனவாக இருப்பதால், இவை ''பதம்'' எனப்படும். இதனையே சுந்தரமூர்த்தி சுவாமிகள், ''அந்தியும் பகலும் அஞ்சுபதம் சொல்லி'' என்று அருளிச் செய்தார்கள்.

பதம் சொல்லி"

''வன்னம்'' என்பது, சொற்களில் உள்ள எழுத்துக் களைக் குறிக்கும். அஃதாவது மந்திரம் என்னும் சொல் எழுத்து வடிவில் தோன்றுவது. எடுத்துக்காட்டாக, ''சிவாய நம'' என்னும் மந்திரத்தில் ஐந்து எழுத்துக்கள் இருப்பதைக் காணலாம், வேறுசில மந்திரங்களில் எழுத்துக்களின், எண்ணம் கூடியும் குறைந்தும் வரும்.

இதுவரை ''சொல் உலகம்'' பற்றி ஓரளவு கண்டோம், இனிப் ''பொருள் உலகம்'' குறித்துக் காண்போம்.

## பொருள் உலகம்

பொருள் உலகம் மூன்று வகைப்படும். அவை புவனம் தத்துவம், கலை என்பனவாகும். இவற்றுள்,

புவனம் என்பது, 'உயிர்கள் தங்கியிருக்கும் இடங்களைக் குறிக்கும். முப்பத்தாறு தத்துவங்களிலும், மொத்தம் இரு நூற்று இருபத்துநான்கு புவனங்கள் உள்ளன. அவை வருமாறு.

| தத்துவம் | புவனங்களின் எண்ணிக்கை |
| --- | --- |
| 1 பிருதிவி (மண்) தத்துவத்தில் | - 108 |
| 2 அப்பு (நீர்) தத்துவத்திலிருந்து பிரகிருதி மாயா தத்துவம் வரை | - 56 |
| 3 வித்தியா தத்துவம் ஏழிலும் | - 27 |
| 4 சுத்த வித்தை ஈசுவரம் சாதாக்கிய தத்துவங்களில் | - 18 |
| 5 நாதம், விந்து தத்துவங்களில் | - 15 |
| | 224 |

புவனங்கள் வேறு; அண்டங்கள் வேறு. அண்டங்கள் என்பன கோளங்களைக் குறிக்கும். நாம் வாழும் பிருதிவி தத்துவத்தில் மட்டும் ஆயிரம் கோடி அண்டங்கள் உள்ளன. அவற்றுள் மிகவும் சிறியது இந்த பூமி (பூகோளம்) முப்பத்தாறு தத்துவங்களிலும் கோடானு கோடி கோளங்கள் (அண்டங்கள்) உள்ளன. இவ்வுண்மையைத் திருவாசகம்,

'' அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்,
அளப்பரும் தன்மை. வளப்பெரும் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்று எழில் பகரின்,
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன''

என்று விதந்து ஓதுகின்றது.

" தத்துவம் " என்பது, நாதம் முதல் பிருதிவி ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களைக் குறிக்கும். (தனிக்கட்டுரையில் காண்க)

" கலை " என்பது, இறைவனின் அருட்சத்தி தொழிற் படும் நிலையைக் குறிக்கும். உயிர்களை முத்திக்கு இட்டுச் செல்லும் பொருட்டு, அருட்சத்தி ஐந்து கலைகளாக நின்று உதவுகின்றது இந்தக் கலைகள் ஐந்தும், அருட்சத்தியின் முனைப்புக்கு ஏற்ப, அந்தந்த தத்துவங்களில் நின்று கலாதி களை ஏற்படுத்தி, உயிர்களின் அறிவு இச்சை செயல்களை ஊக்குவிக்கின்றன. இங்குக் " கலாதி " என்றது, வித்தியா தத்துவத்தில் இடம்பெறும் " கலை முதலியன " என்பதைக் குறிக்கும்.

இங்குப் பேசப்படும் ஆறு அத்துவாக்களுள் ஒன்று ஆகிய " கலை " வேறு; முப்பத்தாறு தத்துவங்களில் பேசப்படும் வித்தியா தத்துவங்களில் ஒன்றாகிய " கலை " வேறு. இந்த வேறுபாட்டை நினைவில் நிறுத்திக்கொள்ள வேண்டும். ஆறு அத்துவாக்களில் ஒன்றான கலை, ஐந்தாக விரிந்து பஞ்ச கலைகள் எனப் பெயர் பெற்று. முப்பத்தாறு தத்துவங்கள் முழுவதும் விரவி இருக்கின்றது. அவற்றின் விவரம் வருமாறு !

பஞ்ச கலைகள் விரவியுள்ள தத்துவங்கள்

1. சாந்தியாதீத கலை — சிவம், சத்தி — 2
2. சாந்தி கலை — சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை — 3
3. வித்தியா கலை — வித்தியா தத்துவம் — 7
4. பிரதிட்டாகலை — ஆன்ம தத்துவத்தில் பிருதிவி நீங்கலாக உள்ள தத்துவங்கள் — 23
5. நிவர்த்தி கலை பிருதிவி ( மண் ) தத்துவம் — 1

ஆக 36

இந்த அத்துவாக்கள் ஆறும் ( மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ) உயிர்களுக்கு அறிவு விளக்கம்

தருவனவாக உள்ளமையால், இவற்றிற்கெல்லாம் முதற் காரணமாக உள்ள "மாயை"யைச் சைவ சித்தாந்தம் "ஒளிப்பொருள்" என்று முழக்குகின்றது.

இறைவன் பேரொளிப் பொருள்; மாயை ஒளிப்பொருள். எத்தகைய ஒளிப்பொருள் என்றால், இரவில் பயன்படும் செயற்கை ஒளியைப் போன்றது. இரவு என்றது இங்கு ஆணவ மலத்தை. ஆணவ மலம் இருட்பொருள். உயிர்க்கு ஆணவமலப் பற்று இருக்கும் வரை, மாயையை உயிர்க்கு ஒளியாய் இருந்து உதவும்படி இறைவன் அருளிச் செய்கிறான். ஆணவமலப் பற்று உயிரை விட்டு நீங்கியதும் மாயா காரியங்கள் உயிர்க்குப் பயன்படமாட்டா.

ஆணவமலப் பற்று நீங்குவதற்கு இறைவழிபாட்டு முறைகளை உயிர் கடைப்பிடிக்க வேண்டும்.

## வழிபாட்டு முறைகள் (சாதனம்)

"வழிபாடு" என்பது, அருள்வழியில் நிற்றல் ஆகும். அஃதாவது திருவருள் காட்டிய வழியில் செல்லும் உயிருக்கு உண்டாகும் அனுபவம் என்பது இதற்குப் பொருள் ஆகும். "திருவருள் காட்டிய வழி" என்பது, சிவாகமங்களில் ஞான பாதம் ஆகிய சைவ சித்தாந்த நூல்களில் சொல்லப்பட்ட நெறி முறைகளைக் குறிக்கும்.

## மூவகை வழிபாடு

நமக்குள்ள ஆணவமலப் பற்று நீங்குதல் பொருட்டு குருலிங்க சங்கம வழிபாடு செய்து வரவேண்டும். இம் மூவகை வழிபாடுகளில்,

"குருவழிபாடு" என்பது, நமது அறியாமையைப் போக்கும் ஞானாசிரியரை வழிபடுவதைக் குறிக்கும். ஆசு – அறியாமைக் குற்றம். இரியர் – நீக்குபவர். வித்தியாகுரு வேறு. ஞானாசிரியர் ஆகிய குரு நாதர் வேறு. "வித்தியாகுரு" என்பவர், ஞான சாத்திரக் கல்வியைப் போதிக்கும் போதகாசிரியர் ஆவர். "குரு நாதர்" என்பவர், அனுபவ ஞானத்தை நமது பக்குவத்திற்கு ஏற்ப நமக்குப் புகட்டுபவர். குருநாதரே "ஞானத்தந்தை" எனப்படுவார். குரு நாதர் நமது

அஞ்ஞானத்தைப் போக்கி நமக்கு மெய்ஞ்ஞானத்தை உணர்த்துபவர் ஆகலின், ஆணவமலப் பற்று நீங்கப் பெறுவதற்குக் குருவழிபாடு பெரிதும் உதவும்.

''இலிங்க வழிபாடு'' என்பது, சிவக்கொழுந்து ஆகிய இறைவனின் அருவுருவத் திருமேனி வழிபாட்டைக் குறிக்கும். அனைத்துச் சிவன் கோயில்களிலும் மூலமூர்த்தியாய் இருக்கும் சிவலிங்கத்தை வழிபடுவதால், ''எல்லாம் சிவம்'' என்னும் உணர்வு தலைப்படும். இவ்வுணர்வு நமக்கு இருவினை ஒப்பினை ஏற்படுத்தும். எனவே, சிவவழிபாடு நமக்குள்ள கன்மமல நீக்கத்திற்குத் துணை செய்யும்.

''சங்கம வழிபாடு'' என்பது சிவனடியார் கூட்டத்தை வழிபடுவதைக் குறிக்கும், "அடியார்'' எனப்படுபவர், சிவபெருமான் திருவடியையே அன்றி வேறு எதையும் நினைவில் கொள்ளாதவரே ஆவர். சிவம் ஒன்றே என்னும் ஒரே நிலையில் நிற்பது, பிற எல்லாம் நிலையற்றவை ஆகும். ஆகவே, சிவனடியாரை வழிபடும்பொழுது, அவ்வழிபாடு உலகப்பற்றில் உள்ள விருப்பத்தைச் சிறிது சிறிதாகக் குறைக்கும்படி செய்யும். உலகப் பற்று அறும்பொழுது, உலகிற்கு முதற்காரணமாகிய மாயாமலப் பற்றும் நம்மை விட்டு நீங்கிவிடும், எனவே மாயாமல நீக்கத்திற்குச் சங்கம வழிபாடு பெரிதும் துணை செய்கிறது.

### வழிபாட்டின் பயன்

இந்த மூவகை வழிபாடு செய்து வரும் நிலையில், உயிரின் உணர்வில் முதலில் இருவினை ஒப்பு நிகழும். ''இருவினை ஒப்பு'' என்பது, ஒருவன் தான் செய்த நல்வினைப் பயன் ஆகிய இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகக் கருதுவதாகும். அஃதாவது இன்பத்தில் விருப்பும் துன்பத்தில் வெறுப்பும் இல்லாமல், இரண்டு வினைப் பயன்களையும் ஒப்ப நோக்குதல் ஆகும், இன்ப அனுபவத்தைப் போலவே துன்ப அனுபவத்தையும் விருப்பு வெறுப்பு இன்றிச் சமமாக நோக்கும் நிலையினை எய்துவதே ''இருவினை ஒப்பு" எனப்படும்.

அடுத்துச் சைவ சித்தாந்த சாத்திரங்களைக் கற்று அவற்றின் துணைக்கொண்டு திருமுறைகளைப் படனம் செய்து

வரவேண்டும். சைவசித்தாந்த சாத்திரங்களை நல்லாசிரியரை அணுகி முறையாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிவு பெறல் வேண்டும், அந்தத் தெளிவோடு திருமுறைகளைப் படனம் செய்தோமாயின், அப்படனம் ஆன்ம அறிவை மறைத்து வரும் ஆணவமலத்தின் ஆற்றலை நம்மிடம் செல்லுபடி ஆகாமல் செய்து, பையப்பைய நமக்கு அறிவு விளக்கம் ஏற்படச் செய்யும். இவ்வாறு ஆணவமலத்தின் ஆற்றல் நம்மிடம் செல்லுபடி ஆகாமல் போவதற்கு, "மல பரி பாகம்" என்று பெயர். இந்த மலபரிபாகம், நிகழ நிகழ, இருவினை ஒப்பும் எய்தப் பெறும், இரண்டும் சமகாலத்தில் நிகழ்வன ஆகும்.

இவ்வாறு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் எய்தப் பெற்ற ஆன்மாவினிடத்தில் சத்திநிபாதம் நிகழும். "சத்தி நிபாதம்" என்பது, உயிரின் ஆணவமலப் பற்றுக்கு ஏற்ப, அதன் அறிவை மறைத்து வந்த இறைவனின் மறைப்பாற்றல். மலபரிபாகத்திற்கு ஏற்ப, உயிரின் அறிவில் அருளாற்றலாக மாறிப் பதிதலைக் குறிக்கும். (சத்திநிபாதம்-திருவருள் பதிதல்) அந்நிலையில், அந்தந்த ஆன்மாவில் நிகழும் ஆணவ நெகிழ்ச்சிக்கு ஏற்ப, இறைவன் ஞானாசிரியரை அனுப்பி, அந்த ஆன்மாவுக்கு அனுபவ ஞானத்தை ஊட்டுவான்.

சத்திநிபாதம் நான்கு வகைப்படும், அதன் விரிவைச் சித்தாந்த சாத்திரகளில் காணலாம்.

### நால்வகை நெறிமுறைகள்

சைவசித்தாந்தத்தில் நால்வகை வழிபாட்டு முறைகள் கூறப்பட்டுள்ளன. அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும். அவற்றுள் "சரியை" என்பது சரீரத்தினால் வழிபடுவது ஆகும். அஃதாவது திருக்கோயிலை வலம் வருவது. திருக்கோயிலுக்குப் பூமாலை தொடுத்துக் கொடுப்பது, திருக்கோயிலில் துப்புரவுப் பணி செய்வது. குருநாதருக்கும் சிவனடியாருக்கும் அமுது செய்வித்தல் முதலாயின ஆகும்.

"கிரியை" என்பது வாயினால் வழிபடுவதைக் குறிக்கும். அஃதாவது திருமுறைகளை நாள்தவறாமல் படனம் செய்வது,

சாத்திர தோத்திரக் கருத்துக்களைப் பிறர்க்கு எடுத்துச் சொல்வது. ஓரிடத்தில் அமரும் பொழுதும் எழும்பொழுதும், ஒன்றைப் பிறரிடம் வாங்கும் பொழுதும், கொடுக்கும் பொழுதும், உறங்கத் தொடங்கும் பொழுதும் உறங்கி எழுந்ததும், திருவைந்தெழுத்தை வாயினால் சொல்வது முதலியன ஆகும்.

''யோகம்'' என்பது மனத்தினால் வழிபடுவதைக் குறிக்கும், அஃதாவது வழிபடு தெய்வ வடிவு ஆகிய உபாசன மூர்த்தத்தை (Adorable form of God - இஷ்டதெய்வம்) மனத்தில் வைத்து தியானிப்பது, அந்தரியாக பூசை செய்வது அஞ்செழுத்து மந்திரத்தை நெஞ்சில் அழுத்திப் பிடித்து உள்ளத்தால் எண்ணுவது முதலியன ஆகும்.

இம் மூவகை வழிபாடுகளையுமோ, அல்லது இவற்றில் ஒன்றிரண்டிலோ உறைப்புடன் நின்று ஒழுகி வருவோமாயின், இறைவன், நமக்கு ஞானத்தை உணர்த்துவன். அவ்வாறு உணர்த்தும் பொழுது, அருளாளர்களை அதிட்டித்து நின்றோ, குரு மகா சந்நிதானங்களைப் போன்று மானுடச் சட்டைதாங்கி நின்றோ ஞானத்தை உணர்த்துவான். ஞானம் தலைப்படும் அந்நிலையில் எங்கும் எதிலும் இறைவனைக் கண்டு வழிபடவேண்டும். அதுவே ''ஞான வழிபாடு'' ஆகும்.

### வழிபடு தெய்வ வழிபாடு

வழிபடுவதற்கு என ஒரு தெய்வ வடிவத்தை நாம் மேற்கொள்ள வேண்டும், அத்தகு வடிவம் மகேசுவர வடிவங்கள் இருபத்தைந்தனுள் ஒன்றாகவோ, சிவலிங்க வடிவமாகவோ இருக்க வேண்டும், அஃது ஒரு கோயிலில் உள்ள வடிவமாகவும் இருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, சிதம்பரத்தில் உள்ள நடராசர் வடிவமாகவோ, திருவண்ணாமலையில் உள்ள சிவக்கொழுந்தாகவோ, திருச்செந்தூரில் உள்ள முருகனுகவோ கொள்ள வேண்டும்.

எந்தத் திருக்கோயிலுக்குச் சென்றாலும் நம் வழிபடு தெய்வம், இந்த வடிவில் நின்று நமக்கு அருள்பாலிக்கிறது என்று கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, சிதம்பரம் நடராசரை வழிபடு தெய்வமாகக் கொண்டிருப்பவர், திருப்பதிக்குச் சென்றாலும், நம் நடராசர் இந்த வடிவில் நிற்கிருர் என்று கருதி வழிபட வேண்டும்.

நமது குறைகளை நம் வழிபடு தெய்வத்தினிடமே முறையிட்டுப் போக்கிக் கொள்ள வேண்டும். அந்த தெய்வ வடிவையே எப்போதும் நினைவில் கொண்டு வாழவேண்டும். அப்படி வழிபட்டு வரும் பொழுது, எல்லாம் வல்ல சிவபெருமான் அந்த வடிவத்தில் நின்று, நமக்கு வேண்டுவன யாவற்றையும் செய்து வருவான்.

ஒரு வழிபடு தெய்வத்தைத் தேர்ந்தெடுத்த பிறகு, அதை மாற்றக்கூடாது. பிற தெய்வங்களோடு ஒப்பிட்டு ஏற்றத்தாழ்வு கற்பிக்கக் கூடாது. சிவபெருமானே, விநாயகனாகவும், முருகனாகவும், அம்மை வடிவிலும், திருமால் வடிவிலும் நிற்கிறான். எனவே தெய்வங்களுக்குள் பேதம் கொள்ளக் கூடாது.

தெய்வங்கள் ஐந்து வகைப்படும். அவை வழிபடுதெய்வம் ஆகிய சிவபெருமான், குலதெய்வம், அதி தெய்வங்கள் ஆகிய நவக்கிரகங்கள், மகமாயி, மாரி, காளி போன்ற சிறு தெய்வங்கள், காட்டேரி, எசக்கி முதலிய பேய்த் தெய்வங்கள் ஆகும். இவற்றுள் சிவபெருமானின் வடிவங்கள் வழிபடுதற்கு உரியன. குலதெய்வமும் நவக்கிரகங்களும் வணக்கத்திற்குரியன. சிறு தெய்வங்களும் பேய்த் தெய்வங்களும் வணக்கத்திற்குக் கூட உரியனவல்ல.

## தீக்கை வழிபாடு

ஆணவ மலப் பற்றை அறுப்பதற்குரிய சிறந்த சாதனங்களுள் ஒன்று சிவதீக்கை முறை ஆகும். தீக்கை என்பது தீட்சை என்னும் வடசொல்லின் திரிபு ஆகும். தீ–கெடுத்தல்; க்ஷை - கொடுத்தல். அஃதாவது மல ஆற்றலைக் கெடுத்து மோட்சத்தைக் கொடுப்பது தீக்கை ஆகும். சைவ சமயத்திற்கே உரியது ஆகலின், சிவதீக்கை எனப்படுகிறது.

சிவதீக்கையை குரு மகா சந்நிதானங்களிடமிருந்தோ, சிவாகம நெறிப்படி ஒழுகும் சிவாசாரியார்களிடமிருந்தோ, ஆசாரிய அபிடேகம் பெற்ற தேசிகர்களிடமிருந்தோ பெற வேண்டும். பிறரிடம் பெறும் தீக்கைகள் சிவதீக்கை ஆகாது.

தீக்கை நான்கு வகைப்படும். அவை சமய தீக்கை, விசேட தீக்கை, நிருவாண தீக்கை, ஆசாரிய அபிடேகம் என்பனவாகும்.

"சமய தீக்கை" என்பது, சைவ சமய நுழைவுக்கு அனுமதி பெறுவதற்கு ஒப்பானது ஆகும். இது சைவ சமயி ஒவ்வொரு வருக்கும் இன்றியமையாதது. இதனைப் பெற்றவர்க்கு, நீரில் குழைத்துத் திருநீற்றினை அணிவதற்கும் அஞ்செழுத்தை ஓதி உருவேற்றுதற்கும் அதிகாரம் ஏற்படுகிறது.

"விசேட தீக்கை" பெற்றவர்க்குச் சிவ பூசை செய்யும் அதிகாரம் ஏற்படுகிறது. "நிர்வாணதீக்கை" பெற்றவர்க்குத் திருக்கோயிலில் உள்ள கிரியைகளுக்கு உதவும் அதிகாரம் உண்டாகிறது. "ஆசாரிய அபிடேக தீக்கை" பெற்றவருக்குத் திருக்கோயிலில் உள்ள திருமேனிகளைத் தொட்டு வழிபாடு செய்து வைக்கும் அதிகாரம் ஏற்படுகிறது.

தீக்கை பெறும் பொழுது, குருநாதர் உபதேசிக்கும் திருவைந்தெழுத்து மந்திரத்தை அவர் உபதேசிக்கின்ற முறையில், செபம் செய்யும் பொழுது பயின்று வரவேண்டும். தீக்கையின் பொழுது உபதேசிக்கப்படும் மந்திரம் அவரவர் தகுதிக்கு ஏற்ப அமைவதாகும். எனவே மந்திர முறையை. மாற்றிப் பயில்வது கூடாது.

## திருவைந்தெழுத்து விளக்கம்

திரு ஐந்து எழுத்து என்பது "சிவாயநம" என்னும் ஐந்து எழுத்துக்களை உடைய தலையாய மந்திரம் ஆகும். இதனை "மந்திரவேந்து" என்பர். ஐந்தெழுத்தில் உள்ள ஒவ்வொரு எழுத்தும் தனித்தனிப் பொருளை உடையது.

சி – சிவன், வ - அருள், ய - உயிர்

ந – மறைப்பாற்றல், ம - ஆணவமலம்

திருவைந்தெழுத்து மூன்று வகைப்படும்.

நமசிவாய - தூலமந்திரம் – பருநிலை.

சிவாயநம – சூக்கும மந்திரம் - நுண்ணிலை.

சிவாயசிவ - அதிசூக்கும மந்திரம் - மிகு நுண்ணிலை

அஞ்செழுத்தை ஓதும் பொழுது "சிவாயநம" என்றே ஓத வேண்டும். "நமசிவாய" என்று ஓதினால், உலகியல் இன்பம் மட்டுமே பெறலாம். இவ்வாறு கூறுவதற்குக் காரணம் வருமாறு :-

"நமசிவாய" என்னும் தூல மந்திரத்தில், மறைப் பாற்றலையும் ஆணவமலத்தையும் குறிக்கும் "ந, ம" என்னும் இரண்டு எழுத்துக்கள் முன்னால் நிற்கின்றன. நாம் உலகியலில் உழல்வதற்குக் காரணம், நமக்குள்ள ஆணவமலப் பற்றே ஆகும். அந்த ஆணவமலப்பற்றினை நம்மை விட்டு நீக்கும் பொருட்டே இறைவன் மறைப்பாற்றலைக் கொண்டு தொழிலாற்றுகிறான். ஆக நாம் உலகப்பற்றில் மோகம் கொண்டு இருக்கும் பொழுதே மறைப்பாற்றல் நிகழ்கிறது என்பது பெறப்படும். "ந, ம" என்னும் இரண்டு எழுத்துக் களையும் முன்னிலைப் படுத்தித் திருவைந்தெழுத்தை நாம் ஓதும்பொழுது, நமக்கு உலகப்பற்றே மீதூரும்.

"சிவாய நம" என்னும் சூக்கும மந்திரத்தில் இறைவனை யும் அவனருளையும் குறிக்கும் "சி, வ" என்னும் இரண்டு எழுத்துக்கள் முன்னால் நிற்கின்றன. இந்தப் பிறவியில் நம்மை ஒழுங்குபடுத்தி, அடுத்து ஒரு பிறவி ஏற்படாதபடி நம்மைக் காக்கும் அருளோடு கூடிய சிவத்தை முன்னிலைப் படுத்தி ஓதும்பொழுது, நமக்குத் திருவருளில் பற்று மீதூரும். அதனால் அளவோடு கூடிய உலக இன்பமும் இறை இன்பமும் கிட்டும். எனவே நம்மைப் போன்றவர்கள், "சிவாய நம" என்றே ஓதவேண்டும்.

"சிவாய சிவ" என்னும் அதிசூக்கும மந்திரத்தை, உலகப் பற்று அறவே நீங்கப்பெற்றவர்களே ஓதவேண்டும். உலகப் பற்றோடு இருப்பவர்கள் இந்த மந்திரத்தை ஓதக் கூடாது. இந்த அதிசூக்கும அஞ்செழுத்தில் முன்னும் பின்னும் சிவனருள் நின்று 'ய" காரமாகிய உயிரைக் காக்கிறது. இஃது இருதலை மாணிக்கம் என்று சிறப்பாகப் பேசப்படும். இதில் "ம" காரம் இல்லாமையால் ஆணவமலப்பற்று அறவே நீங்கப்பெற்றவரே இதனை ஓதுதற்கு உரியராவர்.

திருவைந்தெழுத்தை "ஓம்" சேர்த்தும் ஓதலாம் ஓம் சேர்க்காமலும் ஓதலாம். "ஓம்" என்னும் பிரணவ மந்திரத்தில், "சிவாயநம" என்னும் சூக்கும ஐந்தெழுத்து உள்ளது, அதன் விவரம் வருமாறு :

அ + உ + ம் = ஓம்.

''அ" என்னும் எழுத்து சிவத்தையும் அருளையும் குறிக்கும். (சிவா) ; "உ" என்பது உயிரைக் குறிக்கும். (ய); ''ம்'' என்பது ஆணவ மலத்தையும் மறைப்பாற்றலையும் குறிக்கும், (நம). ''ம்" என்னும் எழுத்தில் ''ம'' காரம் ஆணவ மலத்தையும் அதன் மேல் உள்ள புள்ளி, மறைப்பாற்றலையும் குறிக்கும். எனவே ''ஓம் நமசிவாய'' என்று ஓதினால், ''சிவாய நம. நமசிவாய'' என்று அமையும். "ஓம் சிவாயநம'' என்று ஓதினால், ''சிவாயநம, சிவாயநம" என்று அமையும். ''ஓம் சிவாயசிவ'' என்று ஒரு போதும் ஓதக் கூடாது 'சிவாயசிவ" என்பது அதிசூக்கும மந்திரமாகலின், அதற்கு முன்பு சூக்கும மந்திரப் பொருளைக் குறிக்கும். ''ஓம்'' அமைதல் கூடாது.

''நமச்சிவாயம்'' என்பது சிவபெருமானின் திருப் பெயரைக் குறிக்கும், ''நாதன் நாமம் நமச்சிவாயவே" என்பது சம்பந்தர் வாக்கு. ''ச'' கர ஒற்று ஆகிய ''ச்'' ஐந்தெழுத் தோடு சேர்ந்து வந்தால், அஃது இறைவன் திருப்பெயரையே குறிக்கும், ''ச" கர ஒற்று நீங்கப் பெற்று இருப்பதே மந்திரம் ஆகும்.

நாமம்வேறு. மந்திரம்வேறு. நாமங்களை உச்சரிப்பது சாதாரணக் கண் கொண்டு காண்பதைப் போன்றது. மந்திரங் களை உச்சரிப்பது, பூதக்கண்ணாடியின் உதவியால் பொரு ளைக் காண்பதைப் போன்றதாகும். இறைவனுக்கு எண்ணற்ற நாமங்கள் உள்ளன. மந்திரம் ஒன்றே உள்ளது. எனவே நாமங்களை உச்சரிப்பதைக் காட்டிலும், மந்திர உச்சாடனம் பல மடங்கு பயனைத் தரும். அதனால் நாம உச்சாடனம் பலனைத் தராது என்பது பொருளன்று.

இறைவன் திருவைந்தெழுத்து வடிவமாகவே இருக்கிறான். அருவ நிலையும் ஐந்தெழுத்து வடிவமே ஆகும். சொருப நிலையும் அஞ்செழுத்து வடிவே ஆகும். ஆகவே அஞ்செழுத் தை ஓதும் பொழுது, அறிந்தோ அறியாமலோ, ஆன்மா இறைவடிவத்தைப் பெற்றுவிடுகிறது.

அஞ்செழுத்தை நூற்றெட்டுத் தடவைகள், உருத் திராக்கம் கொண்டு ஓதுவது சிறப்பாகும். நூற்றெட்டுத் தடவைகள் என்று கூறுவதற்குக் காரணம் வருமாறு :

ஒரு சராசரி மனிதன் ஒரு நாளைக்கு 21, 600 தடவைகள் மூச்சுவிடுகிறான் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அதில் நூற்றில் ஒரு பங்கு 216 ஆகிறது. அதில் பாதியைக் காலைப் பொழுதில் 108-ம். மாலைப் பொழுதில் 108-ம் ஆக ஓத வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. இது நமது அன்றாட சுவாசத்தில் ஒரு விழுக்காடு ஆகும்.

அஞ்செழுத்தைப் பிறர் செவிக்குக் கேட்குமாறும் ஓதலாம். தன் செவியில் மட்டும் விழுமாறும் உச்சரிக்கலாம், தன் செவிக்கும் கேட்காத வண்ணம் உள்ளத்தில் வைத்தும் எண்ணலாம். இம்மூன்றனுள் எப்போதும் உள்ளத்தில் வைத்து எண்ணுவதே சிறப்பாகும்.

நாம் கற்கும் வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள் முதலியவற்றின் சாரமாக (Quintessence) இருப்பது அஞ் செழுத்தே ஆகும் சிவாகமங்களில் அஞ்செழுத்து ஒன்றே மந்திரமாக உள்ளது. எனவே சைவ சமயத்தைச் சார்ந்த வர்கள் அனைவரும் அஞ்செழுத்து மந்திரத்தை எப்போதும் எண்ணியே இருக்கவேண்டும்.

**திருக்கோயில் வழிபாட்டு முறை :**

திருக்கோயில் வழிபாடு சைவ சமயத்தில் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. திருக்கோயிலில் சிவபெருமான் சிவலிங்க வடிவில் மூலவராக எழுந்தருளியுள்ளான். திருக் கோயிலின் வாயிலில் உள்ள துவாரபாலகர்கள் காட்டும் கைக் குறிப்பிலிருந்து, சிவபெருமான் ஒருவனே கடவுள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

திருக்கோயிலின் உள்ளே சிவபெருமானின் பல்வேறு வடிவங்களும் அடியார் பெருமக்களும் எழுந்தருளி இருப் பதைக் காணலாம். நடராசர், தட்சணாமூர்த்தி, விநாயகன், முருகன். அம்மை முதலானவை சிவ வடிவங்களாகும். சமய குருவர் நால்வர், அறுபத்து மூவர் முதலியோர் அடியார் பெருமக்களாவர். நந்தி, சண்டேசுரர் முதலியோர் பரிவார தெய்வங்களாவர்.

திருக்கோயிலினுள்ளே தனித்து இருக்கும் அம்மை வடி வமும் சிவமூர்த்தமே ஆகும். அஃதாவது சிவபெருமானே

அம்மை வடிவத்தில் அங்கு எழுந்தருளியுள்ளான் எனக் கொள்ள வேண்டும்.

சிவாகமங்களில் உள்ள கிரியாபாத நெறிப்படியே சிவாலயங்கள் நிருமாணிக்கப்பட்டுள்ளன. சிவாகம நெறிப்படி சிவன் கோயில்களில் நவகிரகங்களுக்குக் கோயில் அமைக்க விதி இல்லை. ஆயினும், பெரும்பாலான சிவன் கோயில்களில் நவகிரகங்கள் நிறுவப்பட்டுள்ளன.

திருக்கோயிலில் எப்படி வழிபாடு நிகழ்த்த வேண்டும் என்பதைச் சிவாகம நெறிப்படி காண்போம்.

1 திருக்கோயிலுக்குக் காலை, நண்பகல், மாலை, இரவு என்னும் காலங்களில் சென்று வழிபடலாம். இவற்றுள் மாலையில் சென்று வழிபடுவதே சிறந்ததாகும், நாள்தோறும் திருக்கோயிலுக்குச் சென்று வழிபடுவது மிகவும் நல்லது. அஃது இயலாதவர்கள் வாரம் ஒரு முறையாவது சென்று வழிபட வேண்டும். அஃதும் இயலாதவர்கள் மாதம் ஒருமுறை அல்லது பிரதோஷம், சஷ்டி, கார்த்திகை திருவாதிரை பௌர்ணமி முதலிய சிறப்பு நாட்களில் சென்று வழிபடலாம்.

2 திருக்கோயிலுக்குச் செல்லும் பொழுது, நீராடி தூய உடை அணிந்து செல்ல வேண்டும். ஆண்கள் தங்கள் பணிவைக் காட்டும் பொருட்டு அங்கவஸ்திரத்தை இடுப்பில் அணிந்து செல்ல வேண்டும். சிவச் சின்னங்கள் ஆகிய திருநீறும் உருத்திராக்கமும் அணிந்து செல்ல வேண்டுவது இன்றியமையாததாகும்.

3 திருக்கோயிலினருகே செல்லும் பொழுது, திருக் கோபுரம் அல்லது விமானத்தைக் கண்டவுடன், அதனைத் தூல இலிங்கமாகக் கருதி இருகரங்களையும் சிரமேற் கூப்பி வணங்க வேண்டும்.

4 திருக்கோயிலின் வாயிலில் இரண்டு பக்கங்களிலும் உள்ள விநாயகனையும் முருகனையும் வணங்க வேண்டும். அதன் பிறகு, திருக்கோயிலின் திருப்படியைக் கைகளால் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ள வேண்டும். இந்தத் திருப்படிகளில் பல கோடிக்கணக்கான சிவனடியார்களின்

திருவடிகள் பட்டிருப்பதால், அவர்களது அருளாசி நமக்குக் கிட்டும்.

5 உள்ளே சென்று, பலிபீடத்திற்கு அருகில் வடக்கு நோக்கிக் கீழே விழுந்து வணங்க வேண்டும். ஆண்கள் அட்டாங்க வணக்கமும், பெண்கள் பஞ்சாங்க வணக்கமும் செய்தல் வேண்டும்.

"அட்டாங்க வணக்கம்" என்பது, சிரசு, நெஞ்சு, முழங்கால் இரண்டு, முழங்கை இரண்டு, செவி இரண்டு என்னும் எட்டு உறுப்புக்களும் (அங்கங்களும்) தரையில் தோயும் படி வணங்குதல் ஆகும்.

"பஞ்சாங்க வணக்கம்" என்பது சிரசு, முழங்கால் இரண்டு, முழங்கை இரண்டு என்னும் ஐந்து அங்கங்களும் நிலத்தில் படியும் படி வணங்குதல் ஆகும்.

பலிபீடத்திற்கு அருகிலன்றி, வேறு எந்த இடத்திலும் திருக்கோயிலினுள்ளே கீழே விழுந்து வணங்குதல் கூடாது. அவ்வாறு வணங்கினால், பரிவார தெய்வங்களுக்கு அவமரியாதை செய்வதாக அமையும், எனவே தரை வணக்கத்தைப் பிற இடங்களில் செய்யக் கூடாது.

6 பின்பு, பலிபீடத்தின் முன்பு நின்று மனத்தில் எழும் இழிவான எண்ணங்களை பலியிட்டுக், கொடிமரத்தை நோக்கிச் சிரத்தின்மேல் கரத்தைக் குவித்து வணங்க வேண்டும்.

7 சிவ சந்நிதியை அடையும் முன்பு, இடது புறத்தில் அதிகாரநந்தி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி இருப்பார். அவரிடம் அனுமதி பெற்று வணங்கி உள்ளே செல்ல வேண்டும். சில கோயில்களில் அதிகாரநந்தி இருப்பதில்லை. அந்நிலையில் அந்த இடத்தில், அவரைநினைந்து வணங்கி விட்டு உள்ளே செல்ல வேண்டும்.

8 பின்பு சிவலிங்கத்திருமேனியின் திருமுன் நின்று, பஞ்சபுராணம் பாடி வழிபட வேண்டும். "பஞ்சபுராணம்" என்பது, தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய திருமுறைகளிலிருந்து வகைக்கு ஒரு திருப்பாட்டினைத் தேர்ந்தெடுத்து ஓதுவதாகும்.

அவற்றை ஓதும்பொழுது அருகில் நிற்கும் அன்பர்களின் வழிபாட்டுக்கு இடையூறு ஏற்படாதவாறு மெதுவான குரலில் ஓதவேண்டும். வழிபாட்டின் பொழுது சிவலிங்கத் திருமேனியைக் கூர்ந்து நோக்கி நின்று, சிவபெருமான் நமக்குச் செய்து வரும் பேருதவிகளை எல்லாம் நினைந்து நினைந்து நன்றிப் பெருக்கால் காதலாகிக் கசிந்து உருக வேண்டும். அந்த உருக்கம், ஆணவமலக் கட்டை உடைத்து, ஆன்மாவைத் தூய்மையுறச் செய்யும். அதுவே வழிபாட்டின் பயனாகும்.

9 பிறகு திருச்சுற்றினை (பிரகாரம்) வலமாகச்சுற்றி வரவேண்டும். அப்பொழுது திருவைந்தெழுத்தை மனத்தில் எண்ணிக் கொண்டோ வாயில் முணுமுணுத்துக் கொண்டோ வலம் வரவேண்டும். திருமுறைகளை மெதுவாகச் சொல்லிக் கொண்டும் சுற்றிவரலாம். திருக்கோயிலினுள் சென்றதும் யாருடனும் உரையாடக் கூடாது.

அவ்வாறு உரையாடினால், அது வழிபாட்டின் பயனைக் கெடுத்துவிடும். திருச்சுற்றினை மூன்று அல்லது ஐந்து முறை சுற்றி வரலாம். ஒருமுறை சுற்றி வந்தாலும் தவறில்லை. வழிபாட்டின் பொழுது மனம் திருவருளில் தோய்ந்திருக்க வேண்டும் என்பதே முக்கியம்.

10 திருச்சுற்றில் எழுந்தருளி இருக்கும் சமய குரவர்கள், அறுபத்து மூவர், தட்சிணாமூர்த்தி, நடராசர், முருகன் முதலிய திருவடிவங்களின் முன் நின்று பணிவுடன் வணங்க வேண்டும். நடராசர் திருமுன் நிற்கும் பொழுது, இறைவன் நம்பொருட்டுச் செய்து வரும் ஐந்தொழிலை மனமுருக நினைந்து வணங்க வேண்டும்.

11 அடுத்துத் திருச்சுற்றில் எழுந்தருளி இருக்கும் சண்டேசுரர் திருமுன் சென்று, இடது உள்ளங்கையின் அடிப்பாகத்தில், வலதுகையின் நடுவிரல் மூன்றினால் மெலிதாகத்தட்டி, அவரை வழிபடவேண்டும். சண்டேசுரர், சிவபெருமானின் நிருமாலியத்தைக் கொண்டு, தியானத்தில் இருந்து, வருபவர்களுக்கு வழிபாட்டின் பயனை வழங்குபவர். சண்டேசுரர் முன்பு நூலைப் போடுதல், உரக்கப் பேசுதல், கைதட்டுதல் முதலியன செய்யக் கூடாது.

12 அதன் பிறகு திருச்சுற்றை நிறைவு செய்து மீண்டும் பலிபீடத்தின் அருகில் வந்து, வடக்கு நோக்கி அமர்ந்து, திருவைந்தெழுத்து தியானம் செய்து, மீண்டும் அட்டாங்க வணக்கம், அல்லது பஞ்சாங்க வணக்கம் செய்து, எழுந்து திருக்கோயில் வழிபாட்டை நிறைவு செய்ய வேண்டும். இதுவே திருக்கோயில் வழிபாட்டு முறை ஆகும்.

திருக்கோயில் வழிபாட்டின் பொழுது கடைப்பிடிக்க வேண்டிய சிலவற்றை இனிக் காண்போம்.

1 சிலர் தேங்காய், பழம், மலர் முதலியன கொண்டு சென்று வழிபடுகிறார்கள். அஃது இயலாதவர்கள் வெறுமனே சென்றும் வழிபடலாம்.

2 அஷ்டோத்திரம், சகஸ்ரநாமம் என்று அருச்சனை செய்யச் சொல்லி சிலர் வழிபடுகின்றனர். நம்மைப் போன்றவர்கள், ஒரு திருமுறைப் பதிகத்தை பாடச் சொல்லி, வில்வம் கொண்டு அர்ச்சனை செய்யும்படி வேண்டி வழிபடலாம். "அருச்சனை பாட்டே ஆகும்" என்பது சேக்கிழார் வாக்கு.

3 சிவாசாரியாரிடம் திருநீற்று நிருமாலியத்தைப் பெற்றதும், திரும்பி நின்று திருநீறு அணியவேண்டும். திருமுன்னுக்கு எதிராக நின்று திருநீறு அணியக் கூடாது.

4 திருக்கோயிலினுள் இருக்கும் பொழுது தாம்பூலம் தரிக்கக் கூடாது ; உரத்துப் பேசக்கூடாது.

5 திருச்சுற்றில் காணப்படும் குப்பை கூளங்களை இயலுமாயின் எடுத்து ஓரத்தில் போடவேண்டும்.

## முத்தி நிலை :

முத்தி, மோட்சம், வீடுபேறு என்பன ஒரே பொருளை உடைய சொற்கள். மோட்சம் வேறு ; சுவர்க்கம் வேறு. விடுதலும் பெறுதலும் ஆகிய இரண்டும் சேர்ந்ததே வீடு பேறு ஆகும். பாசத்தை விடுதலும் சிவத்தைப் பெறுதலுமே வீடுபேறு எனப்படும்.

நால்வகை முத்தி :

முத்தி நான்கு வகைப்படும். அவை, பதமுத்தி, அபரமுத்தி பரமுத்தி, சீவன்முத்தி எனப்படும். 'பதமுத்தி'' என்பது சாலோக, சாமீப, சாருப நிலைகளை அடைவதாகும். பத முத்தியில் இருக்கும் உயிர்கள் மலவாசனை உடையனவாக இருக்கும். எனவே அவை மீண்டும் பிறவி எடுப்பதற்கு வாய்ப்பு உண்டு.

''அபரமுத்தி'' என்பது, சூக்கும உடம்பு நீங்கப் பெறும் நிலையில், பதமுத்தியில் இருந்தவாறே, பரமுத்திக்குச் செல்லும் நிலையைப் பெறுவதாகும். எனவே இங்குள்ள உயிர்கள் பெரும்பாலும் பிறவிக்கு வராதனவாகும்.

''பரமுத்தி'' என்பது, மீண்டும் பிறவிக்கு வராத பெரு நிலையை அடைவதைக் குறிக்கும். இதனை சாயுச்சியம் என்பர். இங்கிருக்கும் ஆன்மாக்களுக்கு யாதொரு உடம்பும் இருக்காது. இதுவே முத்தியின் முடிந்த நிலை ஆகும்,

''சீவன் முத்தி'' என்பது, பதமுத்தி நிலையிலிருந்து இறைவன் கருணையால், இவ்வுலகில் தோன்றிய அருளாளர் களது நிலையைக் குறிக்கும். அந்நிலையில் அவர்கள் உடம்போடு இருப்பினும், உடம்பைப் பற்றிய உணர்வு இன்றி நிற்பர்.

சரியை நெறியில் நின்று ஒழுகியவர்கள், சாலோக முத்தி யைப் பெறுவர். அவர்கள் சிவலோகத்திற்குச் சென்று அங்குள்ள போகங்களை அனுபவிப்பர். கிரியை நெறியில் நின்றவர்கள், சிவலோக போகத்தை அனுபவிப்பதோடு, சிவபெருமானோடு அருகில் இருக்கும் சாமீப முத்தியைப் பெறுவர்.

யோக நெறியாளர்கள், சிவலோகத்தில் சிவபெருமான் கொண்டுள்ள திருமேனிகளில் ஒன்றைப் பெற்று நிற்கும் சாருப முத்தியைப் பெறுவர். இம்மூன்றும் பதமுத்தி எனப்படும்.

ஞான நெறியில் நின்றவர்கள், சிவபெருமான் திருவடிக்கீழ் இரண்டறக் கலந்து நின்று, நித்தியானந்தத்தை அனுபவித்து இருப்பர். அந்நிலையில், ஆணவமலப்பற்று அறவே நீங்கப்

பெற்று, ஆன்மா சிவமாம் தன்மை பெற்று, மாறாத பேரின்பத்தில் திளைத்து நிற்கும். இது சாயுச்சிய முத்தி எனப்படும்.

**முத்தியில் ஆன்மாவின் நிலை**

முத்தி நிலையில் ஆன்மா எப்படி இருக்கும் என்பதை இங்குச் சிந்திக்கலாம். பிறவிக்கு வருவதற்கு முன்பு, உயிர் ஆணவ மலத்தை மட்டுமே பற்றி, சார்ந்ததன் வண்ணமாம் தன்மையால், ஆணவமலத்தைப் போல சடமாய்க் கிடந்து, பேரிருளில் மூழ்கி இருந்தது அல்லவா ?

அதுபோல பிறவி நீங்கப்பெற்ற இந்த முத்தி நிலையில், ஆன்மா சிவபெருமானை மட்டுமே பற்றி, சார்ந்ததன் வண்ணமாம் தன்மையால், சார்ச்சிச் சிறப்பு காரணமாக, சிவபெருமானின் எண்குணத் தன்மையைப் பெற்றுச் சிவமேயாய் நின்று, பேரின்பத்தில் மூழ்கி இருக்கும்,

இவ்வுண்மையைச் சிவப்பிரகாசம்,

" ஒன்றி நின்று உணரும் உண்மைக்கு உவமை, ஆணவத்தோடு ஒன்றே " 87 என்று ஓதுகின்றது. இதனையே தாயுமான அடிகளும்,

" ஆணவத்தோடு அத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம் சாரும் நாள் எந்நாளோ ? "

என்று அருளிச் செய்தார்.

முத்தி நிலையில் ஆன்மா, தான் என வேறு தோன்றாமல் சிவமேயாய் நிற்கும்,

முத்திநிலையில் உயிர்க்கு ஐந்தொழில் ஆற்றும் திறன் இல்லை. உயிர் யாதானும் ஒன்றையே பற்றி நிற்கும் தன்மையது ; தனித்து நிற்கும் தகுதி உயிர்க்கு இல்லை. எனவேதான் கேவல நிலையில் ஆணவ மலத்தைப் பற்றி நின்றது; சகல நிலையில் மும்மலங்களைப் பற்றி நின்றது. சுத்த நிலை ஆகிய முத்தி நிலையில் சிவத்தைப் பற்றி நிற்கும்.

ஐந்தொழில் ஆற்றுவதற்கு சுவதந்திரம் வேண்டும். உயிர், தனித்து நிற்கும் தன்மையற்றது. ஆகலின், சுவதந்திரம் உடையதன்று. எனவே முத்தி நிலையில் ஆன்மா, இறை

இன்பத்தை மட்டும் அனுபவித்து நிற்க முடியுமே அன்றி, ஐந்தொழில் ஆற்றுதற்கு இயலாது.

இவ்வுண்மையைச் சிவஞான சித்தியார்,

'' உம்பர் பிரான் உற்பத்தியாதிகளுக்கு உரியன் ;
உயிர்தானும் சிவானுபவம் ஒன்றினுக்கு உரித்தே '' 319

என்று ஓதுகின்றது.

'' இல்லது தோன்றாது '' என்னும் சற்காரிய விதிக்கு ஏற்ப, அநாதியே ஐந்தொழில் ஆற்றும் இயல்பு இல்லாத ஆன்மா, முத்தி நிலையில் மட்டும் எப்படி ஐந்தொழில் ஆற்றும் ஆற்றலைப் பெறும் என்பது சிந்திப்பதற்கு உரியது. முத்தி நிலையில் உயிர்க்குள்ள சூக்கும சரீரம் மாயையில் ஒடுங்கும். கன்ம மலம் இருவினை ஒப்பில் நீங்கி விடும், அந்நிலையில் ஆணவமலம் என்னவாகும் என்பது சிந்தனைக் குரியது.

முத்தி நிலையில் இறைவன் ஆன்மாவுக்குப் பேரின்பத்தை வழங்குகிறான். உயிர் அதனை அனுபவித்துக் கொண்டிருக்கும், அந்நிலையில் உயிர்க்கு ஆணவமலப் பற்று இருக்காது. ஆணவமலத்தை முத்தி நிலையிலும் ஆன்மா பற்றி நிற்குமாயின், இறைவன் வழங்கும் பேரின்பத்தை அஃது அனுபவிக்க முடியாது.

ஆணவமலம் என்றும் உள்ள பொருள். ஆதலினால் அஃது என்றும் தன் மறைத்தல் தொழிலைச் செய்து கொண்டுதான் இருக்கும். நித்தியப் பொருள் ஆகிய ஆணவ மலத்திற்கு இட நீக்கமே கிடையாது. எனவே சிவலோகத்திலும் ஆணவ மல மறைப்பு இருக்கும் எனக் கொள்வதே பொருந்தும்.

முத்தி நிலையில் ஆன்மா சிவத்தை மட்டுமே சார்ந்து நிற்பதால், சிவனை மறைக்க மாட்டாத ஆணவமலம், சிவமாம் தன்மை பெற்ற ஆன்மாவையும் மறைக்க இயலாமல் நிற்கிறது. எனவே முத்தி நிலையில் ஆன்மா ஆணவமல மறைப்புக்கு உட்படுவது இல்லை. இவ்வுண்மையை ஓர் உவமையால் தெளியப் பெறலாம்.

தங்கத்தினால் செய்யப்பட்ட ஓர் அணிகலனில் செம்பு சேர்ந்திருப்பதை அனைவரும் அறிவர். அந்தச் செம்பு தங்கத்தோடு சேர்ந்திருக்கும் வரை, அதனைக் களிம்பு பற்றுவதில்லை. அந்த அணிகலனை உருக்கி இரசாயன முறைப்படி அந்தச் செம்பைத் தங்கத்திலிருந்து வேறாகப் பிரித்து வைத்தால், களிம்பு அதனை உடனே பற்றி விடும். இந்த உவமையில் தங்கம் சிவத்திற்கு உவமை. செம்பு உயிருக்கு உவமை களிம்பு ஆணவமலத்திற்கு உவமை. எனவே, சார்ந்த சிறப்பு காரணமாக இறைவனைச் சார்ந்து நிற்கும் ஆன்மாவினிடத்தில் ஆணவமலத்தின் மறைப்பாற்றல் செல்லுபடி ஆவதில்லை என்பது பெறப்படும்.

இறைவனுக்கு முத்தி தேவை இல்லை. அவன் அநாதியே முத்தியில் இருக்கிறான். ஆணவமலம் சடம்; எனவே அதற்கும் முத்தி தேவை இல்லை, முத்தி நிலை உயிர்க்கு மட்டுமே தேவைப்படுகிறது. ஆன்மாவே ஒருபோழ்து ஆணவ மலத்தைப் பற்றிப் பெத்தனாகவும், ஒரு போழ்து சிவத்தைப் பற்றி முத்தனாகவும் ஆகிறது. எனவே, பிறவி நிலையில் சிவத்தை விட்டு நீங்கி நிற்பதுவும், முத்தி நிலையில் ஆணவத்தை விட்டு நீங்கி நிற்பதுவும், ஆன்மாவின் நிலையே ஆகும். ஆகவே இறைவனுக்கு எப்படி இட நீக்கம் கூற முடியாதோ, அப்படியே ஆணவமலத்திற்கும் இட நீக்கம் கூறக் கூடாது. இறைவன் என்றும் உயிரை விட்டு நீங்காமல் நிற்பது போல ஆணவமலமும் என்றும் உயிரைவிட்டு நீங்காமலே நிற்கிறது. எனவே முத்தி நிலையில் ஆணவமலம் உயிரை விட்டு நீங்குகிறது என்று கூறுவது பொருந்தாது. ஆகவே, ஆணவமலத்தை விட்டு நீங்கி ஆன்மா இறைவனை மட்டுமே பற்றி நிற்பதே முத்தி என்று சைவ சித்தாந்தம் முழக்குகின்றது.

### முத்தி எப்பொழுது ஏற்படுகிறது?

ஆன்மாவுக்கு முத்தி எப்பொழுது ஏற்படுகிறது என்பது குறித்தும் இங்குச் சிந்திப்பது பயனுடையதாக இருக்கும். உயிர் அநாதியே ஆணவமலத்தைப் பற்றி நிற்கின்ற நிலையிலேயே, இறைவனும் உயிரோடு நீக்கமற நிறைந்து நிற்கிறான். அந்நிலையில் உயிர், இறைவனைப் பற்றும திறனின்றி இருந்த நிலையை முன்பே கண்டோம், பின்பு

இறைவன் உயிர்க்குப் பிறவியைத் தருகிறான். அப்பொழுதும் அவன் உயிரோடு தொடர்பு கொண்டுதான் இருக்கிறான். அந்நிலையில் உயிர் முயன்றால் இறைவனைப் பற்றி நிற்க முடியும் ஆனால் பிறவிக்குட்படும் பல்வேறு நிலைகளிலும் உயிர் ஆணவமலத்தைப் பற்றியே நிற்கிறது.

ஏதேனும் ஒரு பிறவியில் உயிர் இறைவனைப் பற்றி நின்று முத்தியைப் பெறுகிறது. எப்படிப் பெறுகிறது? உடலோடு இருக்கும் பொழுதே இறைப்பற்று மீதூர மீதூர உயிர்க்கு முத்தி அனுபவம் ஏற்படுகிறது. 'உள்ளதே சிறக்கும்' என்னும் சற்காரியவாத அடிப்படையில், அநாதியே உயிரோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் இறைவனின் பேருதவியை அறிந்து, ஆன்மா ஆணவமலப் பற்றைவிட்டுத் தன்னோடு உடனாய் நிற்கும் இறைவனையே பற்றி நிற்கிறது உடலோடு இருக்கும் பொழுதே உயிர்க்கு இந்த அனுபவம் உண்டாகிறது எனவே முத்தி எனப்படும் வீடுபேறு ஆன்மாவுக்கு உடலோடு இருக்கும் பொழுதே ஏற்பட்டு விடுகிறது. இந்த முத்தியனுபவம் உடலை விட்டு நீங்கியதும் நிலைத்துவிடுகிறது. எனவே முத்திப் பேற்றினை, இந்தப் பிறவியிலேயே முயன்றால் நாம் பெற்று விடலாம் என்பது தெளிவாகிறது.

## நிறைவுரை

இதுவரை சிந்தித்ததிலிருந்து, சித்தாந்தச் சைவ நெறி ஒன்றே, மனிதனை மிருக நிலையிலிருந்து மனித நிலைக்கு மாற்றி, தெய்வ நிலைக்கு உயர்த்தும் சிறந்த நெறி என்பது தெளிவாகும். கிடைத்தற்கு அரிய இந்த மனிதப் பிறவியைப் பயனுடையதாக வாழ்ந்து, இனியொரு பிறவி வராமல் காப்போமாக.

திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம், சைவ சித்தாந்தத்தில் முழுமையான, நிறைவான பயிற்சியைத் தருகிறது. இந்தப் பயிற்சி மையத்தில் எளிய தமிழ் நடையில் எழுதப் பெற்ற உரையோடு கூடிய பதினான்கு சாத்திரங்களும் மாணவர்களுக்கு வழங்கப் படுகின்றன. மாதம் ஒரு முறை நேர்முக வகுப்புகளும் நடத்தப் படுகின்றன. எனவே இந்தப் பயிற்சி மையத்தில் சேர்ந்து பயன் பெறுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

---

உ
சிவமயம்

# முப்பத்தாறு தத்துவ விளக்கம்

---------------

## தோற்றுவாய்

தத்துவம் என்ற சொல், தத் + துவம் என்னும் இரண்டு சொற்களின் கூட்டுச் சொல்லாகும். தத் — உள்ளது. துவம் — தன்மை. உள்ளதாம் தன்மை — உண்மை. அஃதாவது "தத்துவம்" என்னும் சொல்லுக்குப் பொருள் "உண்மை" என்பதாகும். அதனாலேயே தத்துவ விளக்கம் பேசும், சைவ சித்தாந்த சாத்திரம் ஒன்று "உண்மை விளக்கம்" என்னும் பெயர் பெற்றுள்ளது.

"உண்மை" என்னும் சொல்லில் உள்ள "மை" விகுதி, தன்மை அல்லது இயல்பைக் குறிக்கும். இயல்பாகவே உள்ள பொருளைக் கூறுவது உண்மை ஆகும். ஆங்கிலத்தில் தத்துவத்தை 'Philosophy" என்று குறிப்பிடுவர். இதற்குப் பொருள், Seeking after wisdom or kuowledge, especially that which deals with ultimate reality of things - (Oxford Dictionary) என்பதாகும். அஃதாவது பொருள்களின் மூல முதற்காரணம் பற்றிய சிந்தனை என்பது இதற்குப் பொருளாகும்.

ஆகவே, சைவசித்தாந்தம் கொள்ளும் கடவுள், உயிர், ஆணவம், கன்மம், மாயை என்னும் ஐந்து பொருள்களைப் பற்றிய சிந்தனையே தத்துவம் ஆகும். ஆகவே, இவற்றுள் ஓரிரண்டு பொருள்களை மட்டும் சிந்திப்பது தத்துவமாகாது என்பது பெறப்படும். "பகுத்தறிவுச் சமய சிந்தனைகள்" என்னும் கட்டுரையில் இவற்றைப்பற்றி ஒரளவு சிந்தித்தோம். இப்பொழுது மாயையின் காரியம் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களைக் குறித்துச் சிந்திப்போம்.

## மாயா காரியம்

மாயையின் இலக்கணம் பற்றி முன்புச் சிந்திக்கும் பொழுது. மாயை ஒளிப்பொருள் என்று கூறப்பட்டது நினை

விருக்கலாம். மாயா காரியங்கள் ஆகிய பஞ்சபூதங்களும் ஒளிப்பொருளே ஆகும். ஒரு பொருளின் காரண நிலையில் உள்ள இயல்பே அதன் காரிய நிலையிலும் இருக்கும்.

பஞ்ச பூதங்களுள் விண், மின்னல் ஒளியை வெளிப் படுத்துகின்றது காற்றாலை மின் ஆற்றல், அனல் மின் ஆற்றல், நீர் மின் ஆற்றல் என்றெல்லாம் இருப்பதைக் காண் கிறோம். மண்ணிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய், வைரம் முதலியன ஒளியுடையனவாக உள்ளன. எனவே பஞ்ச பூதங்கள் அனைத்தும் ஒளியுடையன என்பது பெறப்படும். படவே, அவற்றிற்கு மேலே உள்ள அனைத்து தத்துவங் களும் ஒளியுடையனவே என்பது தெளிவாகும்.

ஆணவ மல உண்மையை அறியாத பிற மதவாதிகள் மாயையே உயிர்க்கு மயக்கத்தைச் செய்கிறது என்பர். அது பொருந்தாது. மாயை ஒளிப் பொருள். ஆணவ மலம் ஒன்றே உயிர்க்கு அறியாமையைச் செய்வது என்பது சைவசித்தாந் தக் கொள்கை. மாயா காரியம் ஆகிய உடல்களைப் பெற்ற பிறகும், உயிர் ஆணவ மலத்தோடு கூடி நின்று. அவற்றைப் பயன்படுத்துவதால், மாயை மயக்குவது போல் தோன்றும். அவ்வளவே.

ஆணவமலப் பற்று இன்றி, மாயா கருவிகளைப் பயன் படுத்தும் பொழுது. உயிரின் செயல்கள் ''தொண்டு'' அல் லது '' பணி '' எனப் போற்றப்படுகின்றன. எனவே மாயை உயிர்க்கு உண்மையில் மயக்கத்தைச் செய்வதன்று என்பது பெறப்படும்.

'' மாயா காரியம் '' என்று சித்தாந்த நூல்களில் வரும் இடங்களில், '' தனு கரண புவன போகம் '' என்று பொருள் கொள்ள வேண்டும். '' தனு '' என்பது, எல்லா உயிர்களுக்கும் உள்ள புற உடம்பைக் குறிக்கும். '' கரணம் '' என்பது, அவற்றிற்குள்ள அக உடம்பு ஆகிய மனம், புத்தி, அகங் காரம், சித்தம் என்பனவற்றையும், இவற்றினும் நுட்பமாக இருக்கும் ''வித்தியா தத்துவம் ஏழினையும் குறிக்கும். ''புவனம் '' என்பது, உயிர்கள் அனைத்தும் உடல்களோடு தங்கி இருக்கும் இடம் ஆகிய உலகத்தைக் குறிக்கும், '' போகம் '' என்பது உயிர்கள் அனுபவிக்கும் அனைத்துச் சடப் பொருள்களையும் குறிக்கும்.

## மாயையின் அருவமும் உருவமும் ஆய நிலை

மாயை அருவப் பொருள். அதன் காரியங்கள் அருவமாயும் உள்ளன; உருமாயும் உள்ளன. அக உடம்புகள் அருவம், புற உடம்பு உருவம். அருவத்திலிருந்து உருவம் தோன்றும். இவ்வுண்மையை ஆகாயத்திலிருந்து மின்னல் தோன்றுவதிலிருந்து அறியலாம். பிராணவாயுவும் நீரக வாயுவும் சேர்ந்து, நீர் தோன்றி இருக்கிறது.

இறைவன் அருவமாயும் இருக்கிறான். உருமையாயும் உள்ளான். ஆற்றல் குறைவுடைய உயிர்கள், தன்னை வழிபட்டு உய்யும் பொருட்டு இறைவன் வடிவம் கொண்டுள்ளான். அறிவாற்றல் மிகுந்த ஆன்மாக்கள், தம் அருவ உடலாகிய உள்ளத்தில் வைத்து வழிபடும் பொருட்டு, இறைவன் அருவத் திருமேனியும் கொண்டுள்ளான்.

அருவப் பொருளாகிய மாயையை, இறைவன் உருவப் பொருளாகிய தாத்துவிகங்களாக ஆக்கி இருப்பதன் நோக்கம், உயிர்கள் உண்டு. உடுத்து, உறங்கி, வழிபட்டு உய்யும் பொருட்டே ஆகும், உயிர்களுக்குள்ள உடல்கள் அனைத்தும் உருவம் உடையனவே. உருவமின்றி உயிர்கள் உலகில் வாழ முடியாது. எனவேதான் அருவமாயுள்ள மாயையை இறைவன் உருவமாக மாற்றித் தந்துள்ளான்.

## மூவகை மாயையும் முப்பத்தாறு தத்துவங்களும்

மாயை, சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என மூவகைப்படும் என்பதை முன்பே கண்டோம். இப்பொழுது, முப்பத்தாறு தத்துவங்கள் யாவை என்பதையும் அவை தோன்றும் முறையையும் அவற்றின் இன்றியமையாமையையும் குறித்துச் சிந்திப்போம்,

சுத்த மாயா தத்துவம் — ஐந்து. அவை சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்த வித்தை என்பனவாகும்.

அசுத்த மாயா தத்துவம் — ஏழு. அவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பனவாகும்.

பிரகிருதி மாயா தத்துவம் — இருபத்தி நான்கு. அவை வருமாறு ! -

மனம், புத்தி, அகங்காரம், சித்தம் — அந்தக்கரணங்கள் 4
மெய், வாய், கண், மூக்கு, செவி - ஞானேந்திரியங்கள் - 5
கை, கால், வாய், எருவாய், கருவாய் - கன்மேந்திரியங்கள் - 5
சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் - தன்மாத்திரை - 5
மண், நீர், நெருப்பு, காற்று, விண் - பஞ்சபூதங்கள் — 5
ஆக தத்துவங்கள் முப்பத்தாறு ஆகும்.

## தத்துவங்கள் தோன்றும் முறை

அநாதியே ஆணவ மலத்தைப் பற்றித் தம் அறிவையும் செயலையும் இழந்து கிடந்த உயிர்கள் மீது இரக்கப்பட்டு, இறைவன் அவற்றின் அறியாமையைப் போக்கும் பொருட்டு, மாயையிலிருந்து தனு கரண புவன போகங்களைப் படைத்தான். படைப்புத் தொழிலைத் தொடங்கும் பொழுது, முதன் முதலில் இறைவன் மாயையிலிருந்து சுத்தமாயா புவனத்தைப் படைக்கிறன்,

## சுத்த மாயா புவனம்

இந்த புவனத்தில் இறைவன் மூவகைத் திருமேனிகளில் நின்று ஐந்தொழில்களைச் செய்கிறான். அத்திருமேனிகள் இலயம், போகம், அதிகாரம் எனப்படும், இலயத் திரு மேனியில் இறைவன். "சிவம், சத்தி" என்னும் அருவ நிலையில் நிற்கிறான். இலயம் என்பது ஒடுங்கிய நிலையைக் குறிக்கும். போகத்திருமேனியில், "சதாசிவன்" என்னும் அருவுருவத் திருமேனியில் நின்று. அருளல் தொழிலைச் செய்கிறான். ஆன்மாக்களுக்கு சிவபோகத்தை வழங்குவதால் இதுபோகம் எனப்படுகிறது. அதிகாரத் திருமேனியில், இறைவன் மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் உருவ நிலையில் நிற்கிறான். சிவபெருமான் ஒருவனே, அயனாக நின்று படைத்தல் தொழிலையும், மாலாக இருந்து காத்தலையும், உருத்திரனாக நின்று அழித்தலையும், மகேசுவரனாக நின்று மறைத்தல் தொழிலையும் புரிகிறான்.

இவ்வாறு சுத்தமாயா தத்துவம், இறைவன் ஐந்தொழில் ஆற்றுவதற்கு இடமாக உள்ளது. அபர முத்தி பெற்ற ஆன்மாக்களுக்கு சுத்த மாயை உடலாகவும் உறையுமிடமாகவும் இருக்கிறது. ஆணவம் கன்மம் என்னும் இரு மலங்களும்

விரவாத இடம் ஆகலின், இது சுத்தமாயை எனப்படுகிறது. இறைவன் இங்கு நேரடியாக ஐந்தொழில் புரிகிறான்.

**அசுத்த மாயா புவனம்**

விஞ்ஞான கலர் ஆன்மாக்கள் என்மரில் ஒருவர் ஆகிய அநந்தேசுவரரைக் கொண்டு, அசுத்த மாயையில் உள்ள உயிர்களுக்கு, இறைவன் ஐந்தொழில் ஆற்றும்படி செய்கிறான். இவரை வித்தியேசுவரர் என்றும் கூறுவர். இவருக்கு இருப்பிடம் சுத்த வித்தைக்கும் காலதத்துவத்திற்கும் இடையில் உள்ள பகுதி ஆகும்,

அநந்தேசுவரர் என்பவர் ஆணவமலமும் நீங்கப் பெற்றவர். ஆயினும் ஆணவ மல வாசனை உடையவர். இதனை அதிகார மலவாசனை என்பர், அஃதாவது சிவ பெருமானைப் போன்று அதிகாரம் செய்ய வேண்டும் என்னும் ஆசை உடையவர்.

ஆணவ மலம் வேறு; மலவாசனை வேறு. ஆணவமலப் பற்று உடையவர், உலகப் பற்றினை விடாதவர். மல வாசனை உடையவர், உலகப் பற்றினை விட்டவர். ஆயினும் இயலாத சில ஆசைகளை உடையவர். வயது முதிர்ந்த நிலையிலும் உலகியலில் சிலர், ஏதும் இயலா விடினும், சில ஆசைகளை வைத்துக் கொண்டு இருப்பதைக் காணலாம். இதுவே மலவாசனை எனப்படும்.

மலவாசனை மட்டுமே உடைய அநந்தேசுவரர், சிவ பெருமான் இட்ட கட்டளைக்கு ஏற்ப, அசுத்த மாயையைத் தோற்றுவித்து இயக்குகிறார். "வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈயும்" இறைவன், பதமுத்தி பெற்ற சில ஆன்மாக்களின் அதிகார மல வாசனையினால் ஏற்பட்ட விருப்பத்தை நிறைவேற்றி வைத்தல் பொருட்டு, இவ்வாறு அவர்கள் விரும்பியபடி நடத்துகிறான்.

சுத்தமாயையில் விந்து தத்துவம் தூய்மையாக உள்ளது. அதன்கண் தூய்மையற்று வியாப்பியமாய்க் கிடக்கும் மல கன்மங்களோடு விரவியுள்ள அசுத்த மாயை உள்ளது. அதிலிருந்து காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் ஏழு தத்துவங்களைத் தோற்றுவித்து, அநந்தேசுவரர் தொழிற்படுத்துகிறார்.

இவ்வாறு தொழிற்படுத்தப்படும் அசுத்த மாயை, மோரோடு விரவிய பால் போல, மல கன்மங்களோடு விரவியுள்ளது. வியாபகமாய் உள்ள விந்து தத்துவம், சுத்த மாயையே ஆகும். அதன் வியாபகத்தினுள் அடங்கி வியாப்பியமாய் இருக்கும் அசுத்த மாயையே மலகன்மம் விரவியதாகும்.

அசுத்தமாயா தத்துவத்தைத் தோற்றுவிக்கத் தொடங்கும் பொழுது, அதில் ஒருபகுதியை அநந்தேசுவரர் கலக்குகிறார். அப்பொழுது ' மாயை" என்னும் தத்துவம் ஒன்று தோன்கிறது. இந்த மாயையே, மேலே சொன்ன அசுத்தமாயையில் உள்ள ஏழு தத்துவங்களில் ஒன்றாக உள்ள " மாயை " ஆகும்.

இந்த மாயையிலிருந்து, " காலம், " " நியதி, " " கலை " என்னும் மூன்று தத்துவங்களை, அநந்தேசுவரர் தோற்றுவிக்கிறார். அதன்பிறகு, கலை தத்துவத்திலிருந்து " வித்தை " தத்துவத்தையும், வித்தையிலிருந்து " அராகம் " தத்துவம் தோற்றுவிக்கப்படுகிறது. காலம், நியதி, கலைவித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங்களும் சேர்ந்த ஒரு கூட்டு தத்துவம் " புருடன் " எனப்படும் இதுவே " உள்ளம் " என்று கூறப்படும்.

புருடன் ஒரு தனி தத்துவம் அன்று. அஃது உயிர்க்கு அருகில் இருந்து உதவுவதால் அதனை உபசாரமாகச் சடமன்று என்று கூறுவர் இவ்வாறு அநந்தேசுவரர் ஆகிய வித்தியேசுவரரால் அசுத்தமாயா தத்துவம் தோற்றுவிக்கப் படுவதால், அது வித்தியா தத்துவம் எனப்படுகிறது.

### பிரகிருதி மாயா புவனம்

பிரளயாகலர் ஆன்மாக்களுள் பக்குவம் வாய்ந்த சீகண்ட ருத்திரரைக் கொண்டு, அவரை அதிட்டித்து நின்று சிவ பெருமான் பிரகிருதி மாயா புவனத்தைத் தோற்றுவிக்கிறான். ' அதிட்டித்து நிற்றல்" என்பது அவரை நிலைக்களமாகக் கொண்டு செய்வதைக் குறிக்கும்.

சீகண்டருத்திரர் என்பவர், மலபரிபாகம் வாய்க்கப்பெற்ற நூற்றுப் பதினெட்டு உருத்திரர்களுள் பக்குவம் மிக்கவர் ஆவர் சிவனுக்குரிய நாமங்களைப் பெற்றிருப்பவர். இவரையே நாம் கயிலாயபதி என்கிறோம். சீகண்ட பரமேசுவரர் ஆகிய இவரே நமக்குச் சிவாகமங்களை போதிப்பவர் ஆவர்.

திருமுறை ஆசிரியர்கள், சிவபெருமானை வழிபடும் பொழுது சீகண்டபரமேசுவரரையும் சிவமாகக் கருதி வழி பட்டுள்ளனர். சகலர் வகை உயிர்களாகிய நமக்கு இவரே குரு முதல்வர் ஆவர். குருவைச் சிவமாகக் கொள்ள வேண்டும் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை.

பிரகிருதி மாயா புவனம், ஆன்ம வர்க்கத் தலைவர் ஆகிய சீகண்ட பரமேசுவரரால், இயக்கப்படுவதால், இஃது ஆன்ம தத்துவம் எனப்படுகிறது. இவருக்கு இருப்பிடம் அராக தத்துவம் ஆகும்.

அசுத்தமாயா புவனத்தில் உள்ள "கலை" தத்து வத்திலிருந்து, சீகண்டருத்திரர் பிரகிருதி மாயா புவனத்தைத் தோற்றுவிக்கிறார். இதுவே மூலப்பகுதி, மூலப்பிரகிருதி அல்லது மான் எனப்படும். இந்த மூலப்பிரகிருதியில் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்களும் வெளிப் படாமல் அடங்கி இருக்கும். இவ்வாறு முக்குணங்களும் அடங்கி இருக்கின்ற நிலையை "அவ்வியத்தம்" என்பர்.

வியத்தம் வெளிப்பட்டு நிற்பது. அவ்வியத்தம் வெளிப் படாமல் அடங்கி நிற்பது. முக்குணங்களும் வெளிப்பட்டுத் தம்முள் சமமாக நிற்கும் நிலைக்குக் "குண தத்துவம்" என்று பெயர். குண தத்துவம் என்றொரு தத்துவம், முப்பத்தாறு தத்துவப்பட்டியலில் இல்லை.

ஆன்ம தத்துவங்களுள் ஒன்றாகிய சித்தம் அவ்வியத்தம் எனப்படுகிறது. அதுவே குண தத்துவமாகவும் உள்ளது. இதனைச்,

"சித்தமாம் அவ்வியத்தம் சிந்தனை அதுவும் செய்யும்" — 148

என்னும் சிவஞான சித்தியார் மெய்ப்படுத்துகின்றது.

"சித்தம்" என்னும் தத்துவத்தை 'மனம்" என்னும் தத்துவத்தில் அடக்கி குண தத்துவத்தை பிரகிருதிமாயையில் ஒன்றாக வைத்து, மூலப்பிரகிருதி ஆகிய முக்குணத்தை ஒரு தத்துவமாக சில ஆசிரியர்கள் கொள்கிறார்கள். ஆயினும் பட்டியலில் குண தத்துவம் என்னும் ஒரு தத்துவம் இல்லாமை யால், சித்தத்தையே குண தத்துவமாகக் கொள்வது பொருந்தும்.

எப்படிப் பார்த்தாலும், ஆன்ம தத்துவம் இருபத்து நான்கே ஆகும். ஆன்மதத்துவம் முழுவதிலும் குண தத்துவம் கலந்து நிற்பதால், உலகம் முக்குணமயம் என்கிறோம்.

" சித்தம் " ஆகிய குண தத்துவத்திலிருந்து " புத்தி " தத்துவமும், புத்தி தத்துவத்திலிருந்து " ஆங்கார " தத்துவமும் தோன்றுகின்றன. ஆங்கார தத்துவம் முக்குண வயப்பட்டு, தைசத ஆங்காரம், வைகரி ஆங்காரம், பூதாதி ஆங்காரம் என்று முவகைப்பட்டுத் தொழிற்படுகிறது.

தைசத ஆங்காரம் சத்துவகுண வயப்பட்டது. தைசதம் - ஒளியுடையது, வைகரி ஆங்காரம் இராசத குண வயப்பட்டது, வைகரி - விகாரப்படுவது. பூதாதி ஆங்காரம் தாமதகுண வயப்பட்டது. தாமதம் - மந்தமானது.

தைசத ஆங்காரத்திலிருந்து ' மனம் " என்னும் த்த்துவமும், மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் தோன்றுகின்றன. இந்த ஆறு தத்துவங்களும் சத்துவகுண வயப்பட்டவை ஆகலின், மனம் இயல்பாகவே நல்லது என்பது பெறப்படும், ஆணவ மலப்பற்றுக் காரணமாகவே, மனம் கெடுகிறது என்பது தெளிவாகும்.

வைகரி ஆங்கர்ரத்திலிருந்து, கை. கால், வாய், எருவாய், கருவாய் என்னும் கன்மேந்திரியங்கள் ஐந்தும் தோன்றுகின்றன. ஞானேந்திரியத்தில் இடம் பெறும் வாய், சுவைக்கும் தன்மை உடையது. கன்மேந்திரியத்தில் உள்ள வாய், பேசும் இயல்பை உடையது.

பூதாதி ஆங்காரத்திலிருந்து, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றுகின்றன. தன்மாத்திரை என்பது, பஞ்ச பூதங்களின் குணத்தைக் குறிக்கும். குணம் வெளிப்படாமல் தன் அளவில் நிற்பதால், அவை தன்மாத்திரை எனப்பட்டன. அஃதாவது குணங்களின் தொகுதியே தன்மாத்திரை ஆகும்.

தன்மாத்திரை பூதங்களின் நுண்ணிலையும் ஆகும்.

சூக்குமத்திலிருந்து' தூலம் 'தோன்றும்' என்பது ஒரு விஞ்ஞான உண்மை. எனவே தன்மாத்திரையிலிருந்து

பூதங்கள் தோன்றுகின்றன என்கின்றது சைவ சித்தாந்தம். "ஓசை" தன்மாத்திரையிலிருந்து "வான்" தோன்றுகிறது. "ஊறு" தன்மாத்திரையிலிருந்து, "காற்று" தோன்றுகிறது. "ஒளி" யிலிருந்து "நெருப்பு" தோன்றுகிறது. "சுவை" யிலிருந்து "நீர்" தோன்றுகிறது. "நாற்றம்" தன்மாத்திரையிலிருந்து "மண்" தோன்றுகிறது. இவ்வாறு தன்மாத்திரைகளிலிருந்து பூதங்கள் தோன்றுகின்றன என்பதே அறிவுக்குப் பொருத்தமாக இருக்கிறது.

ஒரு சில மதவாதிகள், வானிலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து மண்ணும் தோன்றுவதாகக் கூறுவர். அவ்வாறாயின் ஆகாயம் (வான்), எதிலிருந்து தோன்றும் என்பதைக் கூறியாக வேண்டும். அஃது இயலாது ஆகலின், பஞ்ச பூதங்கள் அனைத்தும் தன்மாத்திரையிலிருந்தே தோன்றுகின்றன என்பது போதரும்.

இனி முப்பத்தாறு தத்துவங்களின் இன்றியமையாமை குறித்துச் சிந்திப்போம்.

## முப்பத்தாறு தத்துவங்களின் இன்றியமையாமை

தத்துவங்கள் தோன்றிய முறையைச் சிவ தத்துவத்திலிருந்து மண் தத்துவம் வரை, மேலிருந்து கிழாகக் கண்டோம். தத்துவங்களின் இன்றியமையாமையை, நமது அறிவுக்கு எட்டிய மண் தத்துவத்திலிருந்து தொடங்கி, கீழிருந்து மேற்சென்று காண்போம்,

### ஆன்ம தத்துவம் - 24

**பஞ்ச பூதங்கள்**

**மண் — பிருதிவி தத்துவம்.**

கடினமான தன்மையை உடையது. சடப்பொருள்களைத் தாங்குவதற்குப் பயன்படுவது. உயிருக்கு உடலாக வரும் பொழுது, எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பாக நின்று மண் தத்துவம் உதவுகிறது.

**நீர் — அப்பு தத்துவம் -**

மண்ணின் கடினத் தன்மையை மென்மை ஆக்கி, மண்ணைப் பல்வேறு பயன் படு பொருளாக ஆக்குவதற்குப் பயன் படுகிறது. உயிருக்கு உடலாக வரும் பொழுது, சிறுநீர் குருதி, வியர்வை, சளி, கோழை, சுக்கிலம், சுரோணிதமாக நின்று உதவுகிறது.

**நெருப்பு — தேயு தத்துவம்.**

மென்மை ஆக்கப்பட்ட மண்ணை வன்மை உடைய தாக்கி, ஒன்று படுத்தி உதவும்படி செய்கிறது. எடுத்துக் காட்டு ; செங்கல், சிமெண்டு முதலியன. உயிருக்கு உடலாக வரும் பொழுது, இருதயத்தில் வெப்பம், பசித்தீ, கண்ணில் வெப்பம், உடம்புச்சூடு, பைத்தியத்தில் மண்டைச் சூடு முதலியனவாக இருந்து உதவுகிறது,

**காற்று — வாயு தத்துவம்**

உலகெங்கும் பிரிந்து இயங்கி, வன்மையும் மென்மையும் உடைய பொருள்களைக் குவித்து வைக்கப் பயன்படுகிறது.

உயிருக்கு உடலில் உள்ள பிராணன், உதானன் முதலிய தசவாயுக்களாக நின்று உதவுகிறது.

**வான் — ஆகாய தத்துவம்.**

உலகில் உள்ள ஒவ்வொரு பொருளுக்கும் இடைவெளி ஏற்படுத்தி, பொருள்கள் ஒன்றேடு ஒன்று மோதாமல் இயங்குவதற்குப் பயன்படுகிறது. உயிருக்கு உடலில் உள்ள இடைகலை, பிங்கலை, சுழுமுனை முதலிய தச நாடிகளாக நின்று உதவுகிறது,

இவ்வாறு பஞ்ச பூதங்கள் உலகிற்கும் உயிருக்கும் இன்றியமையாதனவாக உள்ளன.

**தன் மாத்திரைகள்**

**நாற்றம்**

மண்ணின் குணமாக இருந்து, உயிருக்கு மணக்கும் உணர்வை ஏற்படுத்துகிறது.

சுவை

நீரின் குணமாக இருந்து, உயிருக்குச் சுவைக்கும் உணர்வை உண்டாக்குகிறது.

ஒளி

நெருப்பின் குணமாக இருந்து, உயிருக்கு உருவத்தைக் கண்டு, சுட்டி அறிய உதவுகிறது.

ஊறு

காற்றின் குணமாக இருந்து, உயிருக்குப் பொருள்களைத் தொட்டு உணரும் அறிவைத் தந்து உதவுகிறது.

ஓசை

ஆகாயத்தின் குணமாக இருந்து, உயிருக்குச் செய்திகளைக் கேட்டு உணரும் அறிவைத் தந்து உதவுகிறது

ஞானேந்திரியர் ( அறிகருவிகள் )

மூக்கு

மணக்கும் உணர்வுக்கு இடமாக இருந்து உயிர்க்கு உதவுகிறது.

வாய் ( சுவைக்கும் நாக்கு )

சுவைக்கும் உணர்வுக்கு இடமாக இருந்து உதவுகிறது.

கண்

உருவத்தைக் கண்டு அறிவதற்கு இடமாக இருந்து உதவுகிறது

மெய்

பொருள்களை உயிர் தொட்டு உணர்வதற்கு இடமாக இருந்து உதவுகிறது.

செவி

ஒலியை உயிர் கேட்டு உணர்வதற்கு இடமாக இருந்து உதவுகிறது.

**கன்மேந்திரியர் ( செயற்கருவிகள் )**

**கருவாய்**

மண் தத்துவத்தை இடமாகக் கொண்டு, சுக்கில சுரோணி தங்களை வெளிப்படுத்துவதற்கு உதவுகிறது.

**எருவாய்**

நீர் தத்துவத்தை இடமாகக் கொண்டு, உடலில் உள்ள கழிவுகளை வெளிப்படுத்துவதற்கு உயிர்க்கு உதவுகிறது.

**கை**

தேயு தத்துவத்தை இடமாகக் கொண்டு, வடிவு உடைய பொருள்களை வாங்குதற்கும், வழங்குதற்கும் உதவுகிறது.

**கால்**

வாயு தத்துவத்தை இடமாகக் கொண்டு காற்றினைக் கிழித்துக் கொண்டு, நடந்து செல்வதற்கும் வருவதற்கும், உயிர்க்குப் போக்குவரத்து உறுப்பாகப் பயன்படுகிறது,

**வாய் ( பேசும் நாக்கு )**

வான் தத்துவத்தை இடமாகக் கொண்டு, ஒலியை எழுப்பிப் பேசுவதற்கு உதவுகிறது,

**அந்தக் கரணங்கள்**

**மனம்**

உயிரின் இச்சைக்கு இடம் கொடுத்து, பொருள்களைப் பற்றுவதற்கு அல்லது சார்ந்து நிற்பதற்கு உயிர்க்கு உதவுகிறது.

**புத்தி**

உயிரின் அறிவுக்கு இடம் கொடுத்து, பற்றிய பொருளை நிச்சயிப்பதற்கு உதவுகிறது,

**அகங்காரம்**

உயிரின் செயலுக்கு இடம் கொடுத்து, நிச்சயித்ததைச் செயல் படுத்துதல் பொருட்டு, ஒருப்பட்டு எழுவதற்கு உதவுகிறது,

சித்தம்

உயிரின் நினைவாற்றலுக்கு இடம் கொடுத்து, மனத்தினுல் பற்றியும், புத்தியினுல் நிச்சயித்தும், அகங்காரத்தினால் ஒருப் பட்டு எழுந்ததும் ஆகிய நிகழ்ச்சிகளை, நினைவில் கொண்டு சிந்திப்பதற்கு உதவுகிறது.

ஆன்ம தத்துவம் ஆகிய பிரகிருதி மாயா புவனத்தில் குண தத்துவமாகவும் நிற்கிறது.

இதுவரை சிந்தித்த இருபத்து நான்கு தத்துவங்களும், உயிரின் அறிவு இச்சை செயல் ஆகிய முன்றும் தொழிற் படுவதற்கு இடமாக நின்று உதவுவதைக் கண்டோம்,

## வித்தியா தத்துவம் - ஏழு

காலம்

நேற்று, இன்று, நாளை என்று முக்காலங்களையும் கண்டு அறிவதற்குப் பயன்படுவது கால தத்துவம். உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைப் பயன்கள் ஆகிய இன்பத் துன்பங்களை அனுபவிப்பதற்கு ஒரு கால எல்லை தேவைப் படுகிறது. அந்தக் கால எல்லையைக் கணக்கிட்டு அறி வதற்குப் பயன்படுவது.

நியதி

அவரவர் செய்த வினைப்பயன்கள் ஆகிய இன்பத் துன்பங்களை, அவரவரே அனுபவிக்குமாறு செய்வதற்கு, வரையறைப் படுத்தும் முறை ஒன்று தேவைப்படுகிறது நல்வினைக்குப் பயன் இன்பம், தீவினைக்குப் பயன் துன்பம் என்னும் நியாய உணர்வை உயிர்க்கு உணர்த்துவது நியதி தத்துவமே ஆகும்.

கலை

அநாதியே உயிர் ஆணவ மலத்தைப் பற்றி நின்றமையால் அதன் அறிவும் செயலும் தொழிற்படாமல் முடங்கிக் கிடந்தன. அந்நிலை கண்டு இரக்கப்பட்டு, இறைவன் கலை தத்துவத்தைப் படைத்து உயிர்க்குக் கொடுத்தான். உயிர் அதனைப் பற்றித் தனது கிரியா சத்தி ஆகிய செயலாற்றலை வெளிப்படுத்தின. இவ்வாறு உயிர்க்குள்ள ஆணவமல

மறைப்பிலிருந்து. உயிர் தனது செயலாற்றலைவெளிப்படுத்து வதற்குக் கலை தத்துவம் உதவுகிறது.

இஃது ஆங்கார தத்துவத்திற்கு உட்கருவியாக இருந்து உதவுகிறது உயிர் தனது செயலாற்றலைத் தொழிற்படுத்து வதற்கு இடம் கொடுத்து உதவுவது ஆங்கார தத்துவம். ஆணவமல மறைப்பிலிருந்து உயிரின் செயலாற்றலை வெளிப்படுத்த உதவுவது கலை தத்துவம். இந்த இருவகை வேறுபாடுகளையும் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

நாம் உறங்கும் பொழுது ஆங்கார தத்துவம் தொழிற் படவில்லை. அதனால் அப்பொழுது எந்தச் செயலையும் செய்யவில்லை. அந்நிலையில் நமது செயலாற்றல், கலை தத்துவத்தில் தங்கி இருக்கிறது. எனவே, உறக்கத்திலிருந்து நாம் எழும்பொழுது, கலை தத்துவத்திலிருந்தே விழித் தெழுகிறோம்.

எந்த ஒரு செயலையும் செய்வதற்கு இயலாமல் நாம் சோர்வுற்று இருக்கும் பொழுது, நமது சோர்வைப் போக்கு வதற்குக் கலை நிகழ்ச்சிகளைக் காண்றோம். அப்பொழுது நமது செயலாற்லை ஊக்குவித்து நமது ஆங்கார தத்து வத்தைத் தொழிற்படுமாறு செய்வது கலை தத்துவமே ஆகும், ஆகவே, உயிரின் செயலாற்றில் உள்ள இயலா மையைக் கலைத்து உயிரைச் செயலுக்கு உட்படுத்து வதற்த கலைதத்துவம் இன்றியமையாதது என்பது பெறப்படும்.

**வித்தை**

அநாதியே ஆணவ மலத்தைப் பற்றி நின்ற உயிரின் அறிவாற்றலும் தொழிற்படாமல் முடங்கிக் கிடந்தமையை மேலே கண்டோம். அது கண்டு இரக்கப்பட்டு, இறைவன் உயிருக்கு வித்தை என்னும் தத்துவத்தைப் படைத்துக் கொடுத்தான். உயிர் அதனைப் பற்றித் தனது ஞானசத்தி ஆகிய அறிவாற்றலை வெளிப்படுத்துவதற்கு, வித்தை தத்துவம் உதவுகின்றது.

இது புத்தி தத்துவத்திற்கு உட்கருவியாக உள்ளது' உயிர் தனது அறிவாற்றலைத் தொழிற்படுத்துவதற்கு இடம்

கொடுத்து உதவுவது புத்தி தத்துவம். ஆணவமல மறைப் பிலிருந்து உயிரின் அறிவாற்றலை வெளிப்படுத்த உதவுவது கலை தத்துவம்.

மது அருந்திய ஒருவனது புத்தி, தொழிற்படாமல் இருக்கும் பொழுது, அவனது அறிவு வித்தை தத்துவத்தில் தங்கி இருக்கிறது. பின்பு அவனது புத்திதத்துவதை, வித்தை தத்துவம் இயக்கியதும், அவனறிவு புத்தி தத்துவத்தோடு தொடர்பு கொண்டு தெளிவடைகிறது. ஆகவே நமது புத்தி தத்துவத்தைத் தொழிற்படுத்தி நமது அறிவாற்றலை ஊக்குவிப்பதற்கு வித்தை தத்துவம் இன்றியமையாதது என்பது பெறப்படும்.

அராகம்

அநாதியே ஆணவ மலத்தைப் பற்றிய உயிர், சார்ந்ததன் வண்ணமாம் தன்மை காரணமாக, தனது இச்சாசத்தி ஆகிய விருப்பாற்றலை வெளிப்படுத்த இயலாமல் நின்றது. அந்நிலை கண்டு இரக்கப்பட்டு. இறைவன் அராகம் என்னும் தத்துவத தைப் படைத்துக் கொடுத்தான். உயிர் அதனைப் பற்றி நின்று, தன் விருப்பத்தை வெளிப்படுத்துவதற்கு அராக தத்துவம் உதவுகிறது.

அராகதத்துவம் மனத்தின் உட்கருவியாகவும் இருக்கிறது. உயிர் தனது விருப்பாற்றலைத் தொழிற்படுத்துவதற்கு இடம் கொடுத்து உதவுவது மனதத்துவம். ஆணவமலமறைப்பி லிருந்து, உயிரின் விருப்பாற்றலை வெளிப்படுத்த உதவுவது அராகதத்துவம்.

ஒன்றை விரும்பி நிற்கும் நாம்; அதே சமயத்தில் பிறிது ஒன்றை விரும்பாமல் இருப்பதற்குக் காரணம், நமது விருப்பாற்றலின் ஒரு பகுதி, ஆணவமல மறைப்பிற்கு உட்பட்டு இருப்பதே ஆகும். "எனக்கு அது பிடிக்காது" என்று நமது விருப்பமின்மையை நாம் வெளிப்படுத்துவத்ற்கு உதவுவது அராக தத்துவமே ஆகும். ஆகவே நமது மனத்தைத் தொழிற்படுத்தி. நமது விருப்பாற்றலை ஊக்குவிப்பதற்கு அராக தத்துவம் இன்றியமையாதது என்பது பெறப்படும்.

மனம் சோர்வுற்று எதிலும் விருப்பமின்றி நாம் நிற்கும் பொழுது, நமது விருப்பாற்றல் மீண்டும் ஆணவமல மறைப்புக்கு உட்பட்டு விடாமல் காத்து நிற்பது அராக தத்துவம் ஆகும். புத்தி தொழிற்படாத நிலையில் நமது அறிவாற்றல் மீண்டும் ஆணவமல மறைப்புட் படாமல் காப்பது வித்தை தத்துவம் ஆகும். அகங்காரம் தொழிற்படாமல் போய் நமது செயலாற்றல் மீண்டும் ஆணவமல மறைப்பினுள் சென்று விடாமல் காப்பது கலைதத்துவம் ஆகும்.

புருடன் :

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங்களின் கூட்டு தத்துவம் ஆகிய புருடதத்துவத்தைப் "பஞ்ச கஞ்சுகம்" என்பர். இஃது உயிர்க்கு உள்சட்டை (பனியன்) போன்றது.

இதனையே "உள்ளம்" என்கிறோம். உள்ளம் வேறு. மனம் வேறு. மனத்தின் உள்ளே அடங்கி அகத்தே இருக்கும் அக அந்தக் கரணமே உள்ளம் ஆகும். மனம் ஒருபுற அந்தக் கரணம் ஆகும். மனம் ஆன்ம தத்துவத்தில் உள்ளது. உள்ளம் வித்தியா தத்துவத்தில் உள்ளது, ஆன்மதத்துவத்தைவிட வித்தியா தத்துவம் நுட்பமானதாகும்.

புருடதத்துவத்தைச் சித்துலகம் என்று கூறுவர். இதற்குக் காரணம், அஃது உயிர்க்கு உறுதுணையாக நிற்பது பற்றியே ஆகும் இஃது ஓர் உபசார வழக்கு. உண்மையில் புருட தத்துவம் ஒரு சடப்பொருளே ஆகும்.

ஒருவர் பேசும் பொழுது, சிலர் மனத்தினால் பற்றி அந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டு இருப்பர். அதே நேரத்தில் பேசுபவரின் தகுதியை அவர்களது உள்ளம் எடைபோட்டுக் கொண்டிருக்கும். பேசுபவர் சொல்வதில் எந்த அளவு உண்மை உள்ளது என்பதை ஊடுருவிப் பார்ப்பது புருட தத்துவமாகும். ஆகவே, எளிதில் புரிந்து கொள்ள முடியாத பல உண்மைகளைப் புருடதத்துவம் ஆகிய உள்ளத்தைக் கொண்டு உயிர் உணர்கிறது. எனவே புருடதத்துவத்தின் இன்றியமையாமை இனிதே புலப்படும்.

மாயை

அசுத்த மாயையின் ஒரு பகுதியை அநந்தேசுரர் கலக்கும் பொழுது, அந்தப் பகுதி "மாயை" என்னும் பெயரைப் பெறுகிறது. இந்த மாயையினைக் கலக்கிய பின்பே, உயிருக்குப் பல்வேறு உடல்கள் உண்டாகின்றன. இந்த மாயையில் மலகன்மம் விரவி உள்ளமையால், இஃது உயிர்க்கு மயக்கத்தைச் செய்யும் மாயை ஆகும்.

உலகிற்கு முதற்காரணமாய் இருக்கும் மாயை வேறு. அதிலிருந்து தோன்றிய சுத்தமாயை வேறு. அசுத்தமாயை வேறு. அசுத்தமாயையில் கலக்குண்ட பகுதி ஆகிய வித்தியா தத்துவத்தில் உள்ள இந்த மாயை வேறு. இவ்வாறு மாயை நான்கு வகைப்படும்.

அசுத்தமாயையின் ஒரு பகுதி ஆகிய மாயை, பொது வகையில் உயிருக்குக் காரண சரீரமாக அமைகிறது. இந்த மாயையில் இருந்தே காலம், நியதி, கலை என்னும் மூன்று தத்துவங்கள் தோன்றுகின்றன. எனவே இந்த மாயையின் இன்றியமையாமை தெள்ளிதின் புலப்படும்.

## உயிர்க்குள்ள ஐந்து சரீரங்கள்

ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கும் வித்தியா தத்துவம் ஏழும் ஆக முப்பத்தொரு தத்துவங்களின் இன்றியமையாமையை இதுவரை கண்டோம். இவையே சகலர் வகை உயிர்களுக்கு உள்ள ஐந்து சரீரங்களாக வருகின்றன. அவற்றைக் குறித்து இப்போது காண்போம்.

1 காரண சரீரம்

அசுத்தமாயையில் கலக்குண்ட ஒரு பகுதி "மாயை" எனப்பட்டு, அஃது ஒரு பொது சரீரமாக வருகிறது. அஃதாவது பிரகிருதி மாயா புவனத்தில் உள்ள எல்லா உயிர்களுக்கும் உரியதோர் பொது சரீரமாக அமைகிறது. அந்நிலையில் உயிர்க்கு ஒருவகை ஆனந்தம் உண்டாகிறது. எனவே இஃது "ஆனந்த மய கோசம்" எனப்படுகிறது. (கோசம் - மேற் போர்வை).

2. கஞ்சுக சரீரம்

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் புருட தத்துவம், உயிர்க்கு ஒரு சிறப்புச் சரீரமாக வருகிறது.

இதுவே கஞ்சுக சரீரம் எனப்படும். கஞ்சுகம் என்றால் சட்டை என்று பொருள். இதனைப் பெற்றதும் உயிர்க்குள்ள அறிவு, இச்சை, செயல்கள் வெளிப்பட்டு, உயிர் ஒருவகை அறிவைப் பெறுகிறது. எனவே இது " விஞ்ஞானமய கோசம் " எனப்படுகிறது.

3. குண சரீரம்

சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்கள் அடங்கிய "மூலப்பிரகிருதி" குணசரிரம் எனப்படும் இதனை "மூலப்பகுதி" என்றும் குறிப்பிடுவர். "அவ்வியத்தம்" என்று சிவஞானசித்தியாரில் ஓதப்படும் சித்தத்தின் தொழிலாகவும் இது கருதப்படுகிறது. எனவே, ஆன்ம தத்துவங்களுள் ஒன்று ஆகிய 'சித்தம்" குண சரீரம் எனப்படும். உயிரின் மனம், புத்தி அகங்காரம் ஆகியவற்றின் தொழில் நிறைவு பெறுதற்குச், சித்தம் பெரிதும் உதவுகிறது. எனவே, இதனை "மனோமயகோசம்" என்று கூறுவர்

4. சூக்கும சரீரம்

மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் மூன்றும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன்மாத்திரைகள் ஐந்தும் ஆகிய எட்டு தத்துவங்களையுடையது, சூக்குமசரீரம் அல்லது நுண்ணுடல் எனப்படும். இந்த எட்டு தத்துவங்களைப் பெற்ற பிறகே உயிர், தான் உயிர்ப்புடன் இருப்பதாக உணர்கிறது. எனவே இது " பிராணமய கோசம் " எனப்படும்.

அந்தக்கரணங்கள் நான்கனுள் சித்தம், சூக்கும சரீரத்தில் இடம்பெற வில்லை என்பது கருத்தில் கொள்ளத் தக்கது. சித்தம், குண சரீரத்தில் வைத்து எண்ணப்படுவதே இதற்குக் காரணமாகும்.

5. தூல சரீரம்

பஞ்ச பூதங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து என்னும் பதினைந்து தத்துவங்களும் " தூல சரீரம் " அல்லது " பருவுடல் " எனப்படும். நாம் உடலை விட்டுப் பிரியும் பொழுது அஃதாவது இறக்கும் பொழுது, இந்தப் பதினைந்து தத்துவங்கள் மட்டுமே நம்மை விட்டுப் பிரிகின்றன. இந்தப் பருவுடல், சோறு, கறி முதலிய

வற்றினால் வளர்வதால், இஃது "அன்னமய கோசம்" எனப்படும்.

உயிர்க்குள்ள இந்த ஐந்து சரீரங்களும், வித்தியா தத்துவம் ஏழு, ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு ஆகிய முப்பத்தொரு தத்துவங்களிலிருந்து கிடைக்கப் பெற்றவை என்பது போதரும்.

உயிர், பரு உடல் ஆகிய தூல சரீரத்தை விட்டு நீங்கியதும் அஃதாவது இறந்தவுடன், பொதுவாக சுவர்க்கம் அல்லது நரகம் செல்கிறது. சுவர்க்கத்தில் உள்ள சுகபோகங்களை நுகர்ந்து இன்புறும் பொருட்டு, உயிருக்கு வேறொரு பருவுடல் வழங்கப்படுகிறது. அவ்வுடலுக்கு "பூதாசார உடம்பு" என்று பெயர். நரகத்தில் உள்ள கொடிய துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் பொருட்டு, உயிருக்கு வழங்கப்படும் பருவுடலுக்கு "யாதனா சரீரம்" என்று பெயர்.

உயிர், பேயாக உலகத்தில் திரிவதற்கு அதற்கு வழங்கப் படும் பருவுடம்புக்கும் "யாதனா உடம்பு" என்றே பெயர். (யாதனை - வேதனை - துன்பம்) இறைவன் வகுத்த கால எல்லைக்கு முன்னதாகத் தாமாகவே தற்கொலை செய்யும் உயிர்கள் பேய்களாகின்றன.

மேலே சொன்ன முப்பத்தொரு தத்துவங்களும், சகலர் வகை உயிர்களாகிய நமக்கு உடம்புகளாக அமைகின்றன. அவ்வாறே பிரளயாகலர், விஞ்ஞானகலர், அபரமுத்தர்கள் ஆகிய ஆன்மாக்களுக்கு அவரவர் வசிக்கும் இடத்திற்கு ஏற்ப, அங்கங்குள்ள முப்பத்தொரு தத்துவங்களும், ஐந்து சரீரங்களாக அமையும்.

விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்கு, அசுத்தமாயைக்கும் சுத்தமாயைக்கும் இடையில் உள்ள புவனங்கள் இருப்பிடம் ஆகும், பிரளயாகலர் ஆன்மாக்களுக்கு அசுத்த மாயையின் நடுவில் உள்ள புவனங்கள் இருப்பிடமாகும். அபரமுத்தர் களுக்கு சுத்தமாயையில் உள்ள புவனங்கள் இருப்பிடமாகும்.

விஞ்ஞானகலர் ஆன்மாக்கள் எடுத்த ஒரு பிறவியிலேயே முத்தி அடைவர். பிரளயாகலர் ஆன்மாக்கள் மறுபிரளய காலத்தில் பிறவிக்கு வர மாட்டார்கள், அபரமுத்தர்கள் சுத்தமாயா புவனத்தில் இருந்தவாறே பரமுத்தி ஆகிய சாயுச்சியத்தைப் பெறுவர்.

முப்பத்தாறு தத்துவங்களின் காரியங்கள் ஆகிய தாத்துவீகங்கள் பற்றி இனிக்காண்போம். தத்துவங்களோடு தொடர்புடைய கருவிகள், தாத்துவிகங்கள் எனப்படும்.

## தாத்துவிகங்கள் - அறுபது :

| | தத்துவத்தின் பெயர் | தாத்துவீகங்களின் பெயர் | |
|---|---|---|---|
| 1. | பிருதிவி | எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு | 5 |
| 2. | அப்பு | சிறுநீர், இரத்தம் வியர்வை, சிலேத்துமம், சுக்கிலம் அல்லது சுரோணிதம் | 5 |
| 3. | தேயு | இதயத்தில் வெப்பம், பசித்தீ, கண்ணில் வெப்பம், உடம்புச் சூடு, பைத்தியத்தில் மண்டைக் கொதிப்பு | 5 |
| 4. | வாயு | பிராணன், உதானன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் ஆகிய தச வாயுக்கள் | 10 |
| 5. | ஆகாயம் | அத்தி, அலம்புடை, இடைகலை, பின்கலை, சுழுமுனை, காந்தாரி, குகுதை! சங்கினி, சிகுவை, புருடன் என்னும் தச நாடிகள் | 10 |
| 6. | ஞானேந்திரிய விடயங்கள் | சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் - | 5 |
| 7. | கன்மேந்திரிய விடயங்கள் | வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் | 5 |
| 8. | அகங்காரம் | தைசதம், வைகாரியம், பூதாதி | 3 |
| 9. | மனம் | காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் என்னும் குற்றங்கள் | 5 |
| 10. | குணம் | சாத்துவிகம், இராசதம் தாமதம் - | 3 |
| 11. | வாக்கு | சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி | 4 |
| | | | 60 |

தத்துவம் முப்பத்தாறு. தாத்துவிகம் அறுபது ஆகிய இரண்டையும் சேர்த்துப் பொதுவாகத் தொண்ணூற்று ஆறு தத்துவங்கள் என்பர்.

இனி சிவ தத்துவத்தின் இன்றியமையாமை பற்றிக் காண்போம்.

**சிவதத்துவம் - ஐந்து :**

சிவ தத்துவத்தை சுத்தமாயா தத்துவம் என்றும் கூறுவர். இதன்கண் சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை என்னும் ஐந்து தத்துவங்கள் உள்ளன. சுத்தமாயா புவனத்தில் சிவபெருமான் நேரிடையாக ஐந்தொழில் ஆற்றுவதால், இது சிவதத்துவம் எனப்படுகிறது.

சிவபெருமானுக்குள்ள திருமேனிகள் அனைத்தும் அருளால் ஆனவை, எனவே சுத்தமாயா தத்துவத்திலிருந்து சிவபெருமானுக்குள்ள திருமேனிகள் தோன்றவில்லை என்பது நினைவில் கொள்ளத்தக்கது. ஆயினும், அபரமுத்தர்களுக்குள்ள சரீரங்கள் சுத்தமாயையிலிருந்தே பெறப்படுகின்றன.

நாம் பேசும் சொற்களையும், நாம் வழிபடும் இறைவனின் திருவுருவங்களையும் சுத்தமாயையிலிருந்தே பெறுகிறோம். அஃதவாது அத்திருவுருவங்கள் அருளால் ஆனவையே. அவை தோன்றும் இடமே சுத்தமாயா புவனமாகும்.

சுத்தமாயையில் உள்ள சிவதத்துவத்தை நாத தத்துவம் என்றும், சத்தி தத்துவத்தை விந்து தத்துவம் என்றும் கூறுவதுண்டு. சுத்தமாயா புவனத்தில் சிவபெருமான் எவ்வாறு ஐந்தொழில் ஆற்றுகிறான் என்பதை இப்பொழுது காண்போம்.

**சிவம் - ( நாதம் )**

இறைவன் தன் ஞான சத்தியைச் சுத்தமாயையின் ஒரு பகுதியை நோக்கிச் செலுத்தும் பொழுது, அதன்கண் ஓர் அசைவு தோன்றும். அந்த அசைவிலிருந்து தோன்றுவது நாத தத்துவம் ஆகும். இந்த நாத தத்துவத்தையே உருவகப்படுத்தி, விநாயகர் வடிவில் திருக்கோயிலின் வலப்புற முகப்பில் வைத்துள்ளனர்.

உலகப் படைப்பைத் தொடங்குவதற்கு முன்பு இது மூல முதற் பொருளாய் இருப்பதால், இந்த தத்துவத்திற்கு நன்றி செலுத்தி விட்டுத் திருக்கோயிலுக்குள் செல்கிறோம். இந்த தத்துவ விநாயகர் வேறு. சுசமுகா அனுக்கிரக வடிவில் மகேசுவர தத்துவத்தில் வரும் வழிபாட்டுக்குரிய இறைவடிவு ஆகிய விநாயகர் வேறு.

சத்தி ( விந்து )

இறைவன் தன் கிரியா சத்தியை, சுத்தமாயையின் மற்றொரு பகுதியை நோக்கிச் செலுத்தும் பொழுது, அதனிடம் ஒரு சுழற்சி தோன்றுகிறது. அந்தச் சுழற்சியே விந்து தத்துவம் எனப்படும்.

நாத தத்துவத்தைத் தோற்றுவிப்பதற்கும் விந்து தத்துவத்தைத் தோற்றுவிப்பதற்கும் இறைவனால் செலுத்தப்படும் இரு நோக்குகளும் ஒரே நேரத்தில் ஏற்படுகின்றன. எனவே நாதம், விந்து ஆகிய இவ்விரு தத்துவங்களின் வடிவே '' ஓங்காரம் '' ஆகும்.

விந்து தத்துவத்தை உருவகப்படுத்தி முருகன் வடிவில், திருக்கோயிலின் இடது முகப்பில் வைத்துள்ளனர். திருக்கோயிலின் முன் இருக்கும் இந்த தத்துவ முருகன் வேறு. மகேசுவர தத்துவத்தில் சோமாசுகந்தன் வடிவில் உள்ள வழிபாட்டுக்குரிய இறைவடிவு ஆகிய முருகன் வேறு.

சாதாக்கியம் (சிவலிங்கம்)

உலகத்தைத் தோற்றுவித்த இறைவன், பக்குவம் வாய்க்கப் பெற்ற உயிர்களுக்கு அருளை வழங்குதல் பொருட்டுத், தன் ஞானசத்தியினாலும், கிரியா சத்தியினாலும் சுத்தமாயையின் மூன்றாம் பகுதியைச் சம அளவில் கூடி ''சதாசிவம்'' (சத்தி + சிவம்) தோன்றுகிறது. இதனையே ''சாதாக்கியம்'' என்பர்.

சாதாக்கிய தத்துவத்திற்குக் கீழ்உள்ள தத்துவங்களை, இறைவன் இந்த தத்துவத்தில் நின்றே இயக்குகிறான். எனவேதான் அனைத்துச் சிவன் கோயில்களிலும் சாதாக்கியம் என்னும் சிவலிங்கம் மூலவராக பிரதிட்டை செய்யப் பெற்றுள்ளது.

மகேசுவரம்

சிவபெருமான் தன் ஞானசத்தியைவிட, கிரியா சத்தியை மிகுத்துச் செலுத்தி நிற்கும் இடம் மகேசுவர தத்துவம் ஆகும். உயிர்களுக்குத் தேவையான அனைத்து ஐசுவரியங்களையும் வழங்குவதால், இஃது ஈசுவர தத்துவம் எனப்படுகிறது.

வழிபாட்டுக்கு உரிய இருபத்தைந்து மூர்த்தங்களையும், இறைவன் இந்த தத்துவத்தை இடமாகக் கொண்டே கொள்கிறான். ஆயினும் அவனுடைய வடிவங்களுள் எதுவும் தத்துவங்களால் ஆனதன்று. அவை அனைத்தும் அவன் அருளால் கொண்டவை ஆகும். இறைவன் பிறப்பு - இறப்பு இல்லாதவன். ஆகலின், அவனுடைய திருமேனிகள் தத்துவங்களாலான யோனி வழித்தோன்றுவன அல்ல.

சாதாக்கிய தத்துவத்தில் நின்று ''அருளல்'' தொழிலைச் செய்யும் இறைவன், மகேசுவர தத்துவத்தில் நின்று ''மறைத்தல்'' தொழிலைச் செய்கிறான்.

சுத்தவித்தை ;

சிவபெருமான் தன் கிரியா சத்தியைவிட ஞானசத்தியை மிகுத்துச் செலுத்தி நிற்கும் இடம், சுத்தவித்தை எனப்படும். இந்த தத்துவத்தில் சிவபெருமான் அயனாக நின்று ''படைத்தல்'' தொழிலையும், மாலாக நின்று ''காத்தல்'' தொழிலையும், உருத்திரனாக நின்று ''அழித்தல்'' தொழிலையும் செய்தருள்கிறான். எனவே சிவபெருமான் ஒருவனே ஐந்தொழில்களையும் செய்தருள்கிறான் என்பது பெறப்படும்.

சுத்தமாயையை ஊத்துவமாயை, மகாமாயை, குடிலை, விந்து என்றும் கூறுவர். சுத்தமாயையில் நின்று '' அழித்தல் '' என்னும் சங்காரத் தொழிலைச் செய்யும் சிவபெருமான், ''மகாருத்திரன் '' எனப்படுகிறான். சுத்தமாயைக்குக் கீழ் உள்ள உருத்திரர்கள். '' குணிருத்திரர் '' எனப்படுகின்றனர். அவர்கள் ஆன்ம வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆகல்ன், குணிருத்திரர் கடவுளர் அல்லர்.

இதுவரை முப்பத்தாறு தத்துவங்களைக் குறித்து ஓரளவு விரிவாகச் சிந்திக்கலாயிற்று. இந்த முப்பத்தாறு தத்துவங்களும், உயிர்களுக்கு அறிவு விளக்கம் தருவனவாக உள்ளமையால், இவற்றிற்கு முதற்காரணமாக இருக்கும '' மாயை '' யைச் சைவசித்தாந்தம் 'ஒளிப்பொருள்' என்று முழக்குகின்றது.

சிவமயம்

# பகுத்தறிவுச் சமய சிந்தனைகள்

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 7 | இல்லை | இல்லை |
| 10 | 21 | பெறாது | பெறாது. |
| 14 | 14 | THINGS | THINKS |
| 15 | 14 | விகைனள் | வினைகள் |
| 15 | 17 | இப்பொருள் | இல்பொருள் |
| 18 | 8 | இயல் | இயல்பு |
| 18 | 17 | பற்றித். | பற்றித், |
| 19 | 5 | அவத்தையில். | அவத்தையில், |
| 19 | 10 | சப்தாது | சப்தாதி |
| 20 | 11 | ஆகும், | ஆகும். |
| 21 | 13 | நிற்கிறது | நிற்கிறது. |
| 24 | 2 | புகழ்ச்சியை | புகழ்ச்சியைக் |
| 24 | 17 | ஆகும் | ஆகும். |
| 24 | 18 | குணம் | குணம், |
| 28 | 2 | பசுத்தன்மை | (பசுத்தன்மை) |
| 30 | 12 | மூலக்கன்மம் | மூலகன்மம் |
| 31 | 19 | ஊட்டஊழ் | ஊட்டப்படுவது ஊழ் |
| 32 | 20 | செயலாற்றலயையும் | செயலாற்றலையும் |
| 35 | 24 | படாமல | படாமல் |
| 36 | 2 | விதியைல் | விதியை |

| | | | |
|---|---|---|---|
| 37 | 29 | செம்யாமல் | செய்யாமல் |
| 41 | 23 | என்பது | என்று |
| 49 | 26 | இன்பத்தையும் துன்பத்தையும் | இன்பத்தையும் தீவினைப் பயனாகிய துன்பத்தையும் |
| 51 | 6 | ,,யோகம்,, | ''யோகம்'' |
| 51 | 23 | வேண்டும், | வேண்டும். |
| 56 | 21 | முலவராக | மூலவராக |
| 56 | 29 | குருவர் | குரவர் |
| 59 | 18 | பொமூது | பொழுது |
| 64 | 33 | பற்றும | பற்றும் |
| 65 | 4 | முடியும் | முடியும். |
| 68 | 26 | இன்றியாமையையும் | இன்றியமையாமை யையும் |
| 72 | 33 | பாருந்தும் | பொருந்தும் |
| 79 | 15 | செயவதற்கு | செய்வதற்கு |
| 79 | 20 | செயலாற்றில் | செயலாற்றலில் |

